

# ஸப்தகிரி

1985

விலை ரூ. 1/-

திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்



"புத்திர் பலம் யசோ தைர்யம்
நிர்பயத்வம் அரோகதா
அஜாட்யம் வாக்படுத்வம் ச
ஹநூமத் ஸ்மரணாத் பவேத்"

புத்தி, பலம், புகழ், உறுதிப்பாடு, அஞ்சாநெஞ்சம், ஆரோக்யம், விழிப்பு, வாக்கு வன்மை ஆகியவைகள் தினசரி ஆஞ்சநேயரை நினைப்பதால் கிட்டும்.

*(ஸ்லோகம் அனுப்பியவர் : திருமதி கமலா மாரியப்பன்)*

மே, 1985

# ஸப்தகிரி

இதழ் 12 மலர் 15

தனிப்பிரதி ரூ. 1 வருடச் சந்தா ரூ. 12

உள்ளுறை



அட்டைப்பட விளக்கம்.

முகப்பில் : ஸ்ரீ ஆஞ்சநேயர்-சித்திரம்: திரு. கே. ஜெகதீஷ்

2-வது, 3-வது: சென்ற மாதம் 6-ந் தேதி அன்று திருமலை மற்றும திருப்பதியில் நடைபெற்ற பல்வேறு தி. தி. நிகழ்ச்சிகளில் முதல்வர் திரு. என். டி.ராமாராவ் அவர்கள் பங்கேற்றபோது.

பின்னட்டையில் : திருச்சானூர் ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயிலின் தெப்போற்சவம்.

சிறப்பாசிரியர் :
திரு. எஸ். லக்ஷ்மிநாராயணு I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியர் :
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு :
THE WELFARE OFFICER
Publication Section, T.T.D.
K. T. Road,
TIRUPATI.

# உங்களுடன்....

மண்ணில் விழுந்தவுடன் மனிதன் அழுகுரலுடன் தன் பசியினைப் புலப்படுத்திக் கொண்டு தன் வருகையினையும் அறிவிக்கின்றான். பெற்றவளால் அவன் பசி தீர்க்கப்படுகின்றது. ஆரம்பத்தில் இவ்வாறாக தன் தேவைகளைப் பிறர் பூர்த்தி செய்யும் நிலையில் இருக்கும் மனிதன், நாளடைவில் தான் வளர்ந்திடும்போது, தன் தேவைகளைத் தானே தீர்த்துக் கொள்கின்றான். தேவைகள் நியாயமாக இருக்கும் வரையில் அவை நிறைவேறும் வழிமுறைகளும் அவனுக்கு எளிமையாகவே அமைகின்றன. இந்நிலைவரை, அவன் உண்மையில் ஒரு மனிதனாகவே விளங்குகின்றான். பிறர் தேவைகளை அவன் தீர்க்க முயலும்போது அவன் ஒரு தலைவனாகக் கருதப்படுகிறான்; ஏன் வணங்கப்படுகிறான்கூட. தீர்க்கப்படும் தேவைகள் உன்னதமாக அமைந்தால், ஆன்மீக இன்பத்தை அள்ளித் தருவதாக இருந்தால், அவற்றைத் தீர்க்கும் அவன் ஒரு மஹானாகப் போற்றப்படுகிறான். ஆனால் பிறர் தேவைகளையும் அவன் தன் சுயநலத்திற்காகப் பறித்திடும்போது-பயன்படுத்திடும்போது அவன் ஒரு நச்சுக்காளானாக இச்சமூகத்திற்கு உருவாகுகிறான். அதனால் மனிதனாக விளங்க வேண்டிய அவன் ஒரு மிருகமாகவும், சமூகத்தின் தலைவனாக வளர வேண்டிய அவன் அதற்கு ஒரு தலைவலியாகவும், மாஹானாக வணங்கப்பட வேண்டிய அவன் மகா பாவியாகவும் கருதப்படுகிறான். இந்நிலையில் அன்பு, இரக்கம், பணிவு, நேர்மை போன்ற அறப்பண்புகள் அழிந்து, 'நான்' 'எனது' என்ற கர்வம் கண்களை மறைக்க கோபம், பொறாமை, திருட்டு, கொலை போன்ற அரக்கப் பண்புகளுக்கு அடிமையாகி தன் அழிவுக்குத் தானே வழிவகுத்துக்கொள்கின்றான்.

கனிந்ததும் கனி மரத்திலின்று உதிர்வது என்பது இயற்கையின் நியதி. இந்நியதி தனக்கும் பொருந்தும் என்பதை மனிதன் மறக்கத்—மறைக்கத் தலைப்படுகிறான். பிறந்தவன் ஒரு நாள் இறப்பான் என்பதையும் இறப்பவன் தன் வினைகளுக்கேற்ப மறுபிறவி எடுப்பான் என்பதையும அறிந்த மனிதன், அவ்இறப்பு தன்னை அணுகாமல் இருக்க விரும்புகின்றான். அதனைத் தடுக்க தன்னாலியன்ற முயற்சிகளையும் மேற்கொள்ளுகின்றான். அறிவினைக் கொண்டு ஆக்கப் பூர்வமான செயல்களுக்கும், ஆன்மீக இன்பத்தை நாடுதற்கும் தன்னை ஈடுபடுத்திக் கொள்ளாமல், பொருளியல் வாழ்க்கையில் அளவுக்கு மீறின பேரார்வம் காட்டுகினறான். இந்தப் பேராா்வமே அடுத்தவனின் உடைமைக்கும் மனையமைதிக்கும் பேராபத்தாக விளங்குகின்றது. உலகாயுத இன்பத்தைத் தேடிக் கொள்ளவே அவனுடைய வாழ்நாளில் பாதி நாள் கழிந்து விடும்போது, அவ்இன்பத்தைத தக்க வைத்துக கொள்ள அவன் மேற்கொள்ளும் முயற்சிகள் மீதி நாட்களை விழுங்கி விடுகின்றது. விதி முடியும்போது அவன் மதியும் மழுங்கிவிடுகினறது. அதனால் பாசத்தின் - அன்பின் உறவினையும் அறுத்துக் கொண்டு கொலைக்கும் அஞ்சாதவனாய் பேய் வெறிப பிடித்து ஆடுகின்றான். இறபபின் உண்மையை அவன் சந்திக்கும்போதுதான் அவனுடைய வெறி அடங்குகின்றது. தன்னையும், தான் வாழும் இவ்வுலகத்தையும் ஆட்டிப்படைக்கும் ஒரு மாபெரும் சக்தி எங்கும் எதிலும் எப்போதும் உள்ளது என்பதை அவன் மறக்க முயலும்போது இந்நிலை அவனுக்கு நேரிடுகின்றது. இதைத்தான் நமக்கு உணர்த்துகின்றது திருமாலின் திருஅவதாரமான ஸ்ரீ நரசிம்மாவதாரம்.

தன் தமையன் இறந்திட்டபோது, அழுது புலம்பிய தன் தாயிடம், மரணத்தின் தத்துவத்தைப் பற்றிப் பலவாறாக விளக்கிட்ட இரண்யகசிபு எனும் அரக்கனே அம்மரணத்திடமிருந்து தான் தப்பித்துக் கொள்ள பல முயற்சிகளை மேற்கொள்ளுகிறான். மரணம் தன்னை எவ்விதத்திலும் அணுகக்கூடாது என்ற எண்ணத்தினால், பிரம்மனிடம் பலவாறாக வரம் கேட்கிறான். ஆனால் அவன் மகன் பிரகலாதன் முன்னிட்டே அவ்அரக்கனுக்கு வியத்தகு வகையில் மரணத்தைத் தந்த அபபரம்பொருளின் அருட்பெருமையினை என்னென்பது! பாற்கடல் நாயகனைப் பழித்திட்டு, மூவுலகையும் தன்கீழ் கொண்டுவர அவன் மேற்கொண்ட கொடூரமான வழிமுறைகளுக்கு ஒப்ப, தேவர்களும் அஞ்சிடும் வகையில், நானிலம் நடுங்க அவன் உயிரை மாய்க்க திருமால் இவ்அவதாரத்தினை மேற்கொண்டார். வினைகளுக்கேற்ப விளைவுகளும் பயங்கரமாக அமையும் என்பதையும், சத்தியம் சோதனைக்குள்ளானால் அதன் இறுதி விளைவு கொடூரமானதாக விளங்கிடும் என்பதையும் இவ் அவதாரத்தால் நாம் அறிகின்றோம். புராணங்களிலும, இலக்கியங்களிலும் இவ் அவதாரப பெருமை மிக்கப் பேசப்படுகின்றது. திருமாலும் வைகுந்தத்தில் இந்த லீலாவதாரத்திலேயே இருப்பதாக நம்மாழ்வார் அறுதியிடுகின்றார். வேதாந்த விழுப்பொருளாக சிங்கபிரான் இருபபதாக உபநிஷத் தெளிவிக்கின்றது. இவ்வவதார மாட்சியினைக் கூறும்முகத்தான், கம்பன் தன் காவியத்திலே ''இரணியன் வதைப்படலம'' என்றே ஒரு தனிப்பகுதியினையே தந்துள்ளான்.

பக்தி மேம்பாட்டின் சீர்மையினை விளக்கிடும் வகையில், போற்றிடும் பக்தனுக்குக் காவலனாகவும், தூற்றிடும் பித்தனுக்குக் காலனாகவும் திகழ்நதிடும இச்சிங்கபிரானை இம்மாதமவரும ஸ்ரீநரசிம்ம ஜெயந்தி அனறு அவன் பெருமை பேசி, அவனடி புகுவோமாகுக!

ஓம் நமோ பகவதே நரஸிம்மாய் நாஸ்தேஜஸ் தேஜஸே
ஆவிராவிர் பவ வஜ்ர தம்ஷ்ட்ர கர்மாசயான்
ரந்தய ரந்தய தமோ கரஸ ஓம ஸவாஹா
அபயம் மம ஆத்மநி பூஷ்டா ''ஓம க்ஷ்ரௌம்''—*பிரகலாத ஸ்துதி.*

# ஸங்கல்ப ஸூர்யோதயம்

ஸம்ஸாரத்திலுழலும் ஜீவர்களின் துர்தசையைக்கண்டு தயையினால் பரமகாருணிகனான பகவான் நமக்கு ப்ரகாசமான சாஸ்திரமென்னும் கைவிளக்கைக் கொடுத்து உதவியுள்ளான் என்பது ஸ்ரீபராசர பட்டரின் திருவாக்கு(ஸ்ரீரங்கராஜஸ்தவம், உத்தரசதகம் ச்லோ-1). அந்த சாஸ்த்ரம் பக்தியோகம், ப்ரபத்தி ஆகிய இரண்டையும் மோக்ஷத்துக்கு வழிகளாக நிர்ணயித்துள்ளன. ஆயினும் உண்மையில் உபாயமாவது ப்ரபத்தியொன்றே: ஏனெனில் அதுவே நேராகவோ, பக்தியோகத்தை முடித்துக் கொடுப்பதன் மூலமாகவோ, மோக்ஷத்துக்குக் காரணமாகிறது. (தயாசதகம் 68). ஆகையினாலேயே முகுந்தன் தன்னிடம் ப்ரபத்தி செய்யாதவர்களுக்குத் தன் ஸ்தானமாகிய ஸ்ரீவைகுண்டத்தைக் கொடுப்பதில்லை என்று கூறப்படுகிறது, ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரயஸாரம், அதிகாரி விபாக அதிகாரம்) ஜீவன் பக்தியோகத்தையோ, ப்ரபத்தியையோ அநுஷ்டித்தால், அதனால் ப்ரீதியடைந்த பகவான் அவனை ஸம்ஸாரத்திலிருந்து விடுவிப்பதாக ஸங்கல்பிக்கிறான். அப்போது எம்பெருமானின் ஸங்கல்பரூபமான ஸூர்யனுக்கெதிரில் இருளும் அஜ்ஞானமும் நிறைந்த ஸம்ஸாரமாகிய காளராத்ரி தானே விலகுகிறது. இவ்வுண்மைகளை அடிப்படையாகக் கொண்டதே ஸங்கல்ப ஸூர்யோதயம் என்று சிறந்த ஸம்ஸ்க்ருத நாடகம்.

**க்ரந்த கர்த்தா :**

இந்த ஆச்சர்யமான க்ரந்தத்தை இயற்றியவர் வேங்கடநாதன் என்ற ஆசிரியர். இவருக்கு ஸ்ரீரங்கநாதனே வேதாந்தாசார்யர் என்ற பிருதை வழங்கினான்(அதிகரண ஸாராவளி-1) விசிஷ்டாத்வைதத்தில் பகவத் ராமாநுஜருக்குப் பிறகு வேதாந்ததேசிகன் என்ற இவரே சிறந்த ஆசிரியர் என்றால் மிகையாகாது. இவர் அருளிய நூல்கள் எண்ணிலடங்கா. சிறியவையும் பெரியவையுமாய் அவை நூற்றுக்கு மேலுள்ளன. இவர் கவிதார்க்கிகஸிம்ஹம் என்ற பிருது பெற்றவர். சிறந்த வேதாந்தி, வ்யாக்யாதா ஸூத்ரகாரர். ஸம்ஸ்க்ருதத்தின் வெவ்வேறு நடைகளிலும் (ஸங் ஸூ 1-12) ப்ராக்ருதம், தமிழ், மணிப்ப்ரவாளம் (ஸம்ஸ்க்ருதமும் தமிழும் முத்தும் மணியும் போல் கலந்தது) ஆகியவற்றிலும் ஸமமான ஸாமர்த்யத்தோடும் அழகோடும் தமது கருத்துக்களை வெளியிட வல்லவர்: இப்படி ஸர்வதோமுகமான ப்ரதிமையுடன் விளங்கிய இவ்வாசார்யர் தொடாத பாகம் வேதாந்தத்திலோ ஸ்ரீவைஷ்ணவத்திலோ கிடையாது. தொட்டவிடமெல்லாம் இவரது மேதா விலாஸத்தின் அடையாளத்தை நாம் காணலாம்.

**நாடக இலக்கியம் :**

எழுத்துக்கலையில் நாடக இலக்கியம் மிகச் சிறந்தது என்று போற்றப்படுகிறது. ஓர் எழுத்தாளன் ஒரு சிறந்த நாடகத்தை இயற்றுவரை அவன் உயர்ந்த கலைஞன் என்று கருதப்படுவதில்லை. நாடகத்தின் மூலம் காண்பிக்க இயலாதது கலையோ விஞ்ஞானமோ ஆகாது என்று ஸ்வாமி வேதாந்த தேசிகன் அபிப்ராயப்படுகிறார் (ஸங். ஸூ. 1-20) ஆகையால் ஸம்ஸாரத்தில் துக்கப்படும் ஜீவர்களிடம் தமக்குள்ள அளவு கடந்த கருணையால் ஸங்கல்ப ஸூர்யோதயமென்னும் இந்த வேதாந்த நாடகத்தை அருளியுள்ளார். இது தேவவாணி என்னும் ஸம்ஸ்க்ருத பாஷையில் அமைந்துள்ளது. இது குணங்களைப் பாத்திரங்களாகச் சித்தரிக்கும் சிறந்த நாடகமாகும்: இதில் வேதாந்தமும் மதக்கொள்கைகளும் பொதிந்துள்ளன.

திரு. எல். ஸ்ரீநிவாஸன்,
டெல்லி

**நாடகமியற்றிய காரணம் :**

அத்வைத ஆசிரியர் க்ருஷ்ணமிச்ரர் தமது “ப்ரபோத சந்த்ரோதயம்” என்ற நாடகத்தை ஸ்வாமி தேசிகனுக்குக் காண்பித்ததாகவும், அதன் மேல் இவர் தமது “ஸங்கல்ப ஸூர்யோதயத்”தை இயற்றியதாகவும் கூறுவர். க்ருஷ்ணமிச்ரரை ஸ்வாமி தேசிகன் ஜயித்ததாக வைபவ ப்ரகாசிகை என்னும் வடநூல் கூறுகிறது. (ச்லோ. 7) ஆயினும் சரித்திர ஆராய்ச்சிப்படி அது சரியல்ல என்று சொல்கின்றனர். ஏனெனில் “ப்ரபோத சந்த்ரோதயம்” ஸ்வாமி தேசிகனின் காலத்துக்கு சுமார் 200 வருஷங்கள் முன்பு எழுதப்பட்டதாகத் தெரிகிறது. அந்த நாடகத்தில் குறிக்கப்படும் கீர்த்திவர்மன் என்ற அரசன் சுமார் கி. பி. 1065யில் ஆண்டதாகத் தெரிகிறது. ஆகவே இவ்விரு ஆசிரியர்களும் ஸந்திக்க ப்ரமேயமில்லை.

ஆயினும் ப்ரபோத சந்த்ரோதயத்தின் காரணமாகவே ஸங்கல்ப ஸூர்யோதயம் உதித்தது என்பதில் ஸந்தேஹமில்லை. அந்த நாடகத்தை ஸ்வாமி தேசிகனிடம் சிலர் காண்பித்து அதே போல் விசிஷ்டாத்வைதத்தைத் தழுவி ஒரு நாடகம் அருளும்படி ப்ரார்த்தித்ததாகத் தெரிகிறது. ஏனெனில் முதல் அங்கத்தில் ஸூத்ரதாரனின் வாயிலாக, சில பெரியோர்கள் தம்மை இந்த நாடகத்தைப் பணிக்கும்படி உத்தரவிட்டதாக ஸ்வாமி தேசிகன் தாமே தெரிவிக்கிறார். (ஸங். ஸூ 1-13, 1-15 ஆகியவற்றையும் காண்க).

(45-ம் பக்கம் பார்க்க)

# ★ ★ ஆழ்வார்களின் அருளமுதம் ★ ★

**முன்னுரை :**

ஆழ்வார்களின் தேனினுமினிய செந்தமிழ்ப்பாக்களின் தொகுப்பு அருளிச் செயல் என்று ஆன்றோரால் அழைக்கப்படும். இதனை திவ்யப் பிரபந்தம் என்றும், நாலாயிர திவ்யப்பிரபந்தம் என்றும் கூறுவதுண்டு; இஃது ஆன்மிய தத்துவ விளக்கம் தரும் செந்தமிழ் வேதமாகவே வைணவர்களால் போற்றப்படுகிறது.

**'திவ்ய' அடைமொழிச் சிறப்பு :**

இப்பிரபந்தம் 'திவ்ய' என்ற அடைமொழியோடு வழங்கப்படும் சிறப்பினை ஆராய்வோம்; திவ்ய என்ற சொல்லுக்கு ஒப்புமிக்கு இல்லாத தன்மையே பொருள்; இவ்வுலகத்தில் உள்ளதைக் காட்டிலும் மிகச் சிறந்தது என்றலும் பொருளாம். உலக வழக்கிலும் நூல் வழக்கிலும் மிகச் சிறந்த ஒன்றைக் கூறும்பொழுது அஃது திவ்யமாக இருந்தது எனச் சொல்லுகிறோம். மலைகுனிய நின்றார் சேவை திவ்யமாக இருந்தது; ஸ்வாமியின் கட்டுரை திவ்யமாக இருக்கிறது; ததீயாராதனம் திவ்யமாக இருக்கிறது என்று அனைவரும் சொல்வதைக் கேட்கிறோம். இங்குச் சிறப்பாக அமைந்திருப்பதையே இது காட்டுகிறது. கண்ணன் தன் சோதிவாய் திறந்து அருளிய கீதை தன்னில் திவ்ய சப்தத்தை இருமுறை கையாண்டுள்ளான். "ஜன்ம கர்ம ச மே திவ்யம்" என்றும் "திவ்யம் ததாமி தே சக்ஷு:" என்றும் கூறுகின்றான். தன்னுடைய அவதாரமும் சேஷ்டிதங்களும் திவ்யமானவை என்றும், தன்னுடைய விஸ்வரூபத்தைக் காண திவ்வியக் கண்களாலேயே ஆகும் என்றும், ஊனக் கண்கள் உதவா என்றும் கூறுகின்றான். இதனால் "திவ்ய" என்ற அடைமொழி கொண்டு விளங்கும் இப்பிரபந்தங்களின் சிறப்பினை ஒருவாறு உணரலாம்.

**பிரமாணம் முதலியன :**

நம்முடைய ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் பிரமாணம்—திவ்யப் பிரபந்தம், பிரமாதா — ஆழ்வார்கள், பிரமேயம்–திருப்பதிகள் என்பனவாம். திவ்யப்பிரபந்தம், திவ்ய ஸூரி, திவ்ய தேசம் ஆகிய பிரமாணம், பிரமாதா; பிரமேயங்களைக் கொண்டு திவ்யமாக விளங்குவது நம் ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயம். பிரமாணங்களில் தலையாய திவ்யப் பிரபந்தத்திற்கு நோக்கு உகந்தருளிய நிலங்களேயாம். இந்த திவ்ய தேசங்களைப் பரக்கப் பேசுதலே இந்நூலுக்குச் சிறப்பு; திவ்யதேச பிரசம்சை இல்லாதன திவ்ய பிரபந்தத்தில் இடம்பெறா. இதனை விளக்குவோம்.

**எம்பெருமானது ஐந்து நிலைகளும் அவற்றுக்கு உரிய நூல்களும்**

எம்பெருமானுடைய நிலைகளை ஐந்து வகையாக சாத்திரங்கள் வகுத்துக்கூறும். அவை பர, வியூக, விபவ, அந்தர்யாமி, அர்ச்சாவதாரம் என்பன. (1) ஸ்ரீவைகுண்ட நிலையனாய் நித்தியர்களாலும், முக்தர்களாலும் ஸேவிக்கப்படுபவனாய் ஸ்ரீவைகுண்டமாகிய பரமபதத்தில் இருக்கும் இருப்பு மனதுக்கும் வாக்குக்கும் எட்டமாட்டாதது. இப்பரத்துவத்தை பேசுவது முதுவேதம். (2) அண்டத்திற்கு உட்பட்டு இருக்கச் செய்தேயும் "பாலாழி நீ கிடக்கும் பண்பை யாம் கேட்டேயும்" என்று க்ஷீராப்தி நாதனின் இருப்பு காதால் கேட்டிருப்பதொன்றன்றி கண்ணால் காணவரிது; இந்நிலையைப் பேசுவன ஆகமங்கள். இந்நிலையே வியூகம் எனப்படும். வியூகமூர்த்திகளாகிய வாசுதேவ, ஸங்கர்ஷண, அநிருத்தர்களின் உபாஸனையைப் பேசுவதே ஆகமங்கள்.(3) "கட்கிலீ உன்னை காணுமாறருளாய்" என்று சக்ஷுர் விஷயமல்லாததும், அஷ்டாங்க யோகத்தாலேயே காண வேண்டியதும் ஆகிய இந்நிலையை ஸ்ம்ருதிகளில் காண்க. இந்த்ராய ஸ்வாஹா என்னுமிடங்களில் இந்திர சரீர விசிஷ்டமான அந்தர்யாமி பரமாத்மாவே குறிக்கப்படுவதால் ஸ்ம்ருதிகளுக்கு அந்தர்யாமி நிலையிலே நோக்கு. (4) "அஜாயமானோ பஹுதா விஜாயதே" என்று எம்பெருமான் செய்யும் அவதார காலங்களிலே அவன் செய்த ஆனைத் தொழில்களையெல்லாம் பரக்கப்பேசுவன புராண இதிகாசங்கள். இப்படி அவதாரம் செய்த நிலையை விபவம் என்பர். எம்பெருமான் அவதரித்த அக்காலத்திலே, அத்தேசத்திலே இருந்தார்க்கு மட்டுமே இந்த விபவ நிலை பயன் பட்டது. (5) காலத்தால் பிற்பட்டாருக்கும், தேசத்தால் வேறுபட்டாருக்கும் அவர்கள் உய்ய அர்ச்சாவதாரமாய் சிலைவடிவிலும் விக்ரக வடிவிலும் வீடு கோயில் முதலிய இடங்களில் எழுந்தருளியிருந்து அருள் பாலிக்கும் எம்பெருமானின் இந்நிலை அர்ச்சாவதாரம் எனப்படும். இதனை "பின்னானார்வணங்கும் சோதி" என்பர்.

**ஐந்நிலையும் அர்ச்சாவதாரமும் :**

வேதம் பரத்துவத்தையும், ஸ்ம்ருதிகள் அந்தர்யாமித்வத்தையும், ஆகமங்கள் வ்யூஹத்தையும், புராணங்கள்

கொட்டையூர் தம்பு ப. கிருஷ்ணசாமி.

விபவத்தையும் கூற எஞ்சி நின்றிடும் அர்ச்சாவதாரத்தை அருளிச் செயல்களே கூறுவன. விபவத்தை பெருக்காறு என்றும், அதில் தேங்கின மடுப்போலே அர்ச்சாவதாரம் என்பர். மடு என்று சொன்னவாறே இடமே பெறப்படுவதால் திவ்ய தேசமே இவற்றுக்கு நோக்கு என்பது பெறப்படும். இவ்வர்ச்சாவதாரத்திற்கு பிரமாண நூல் திவ்யப்பிரபந்தமே என்று கூறினேம். பிரமாதாக்கள் (அருளிச் செய்தோர்) திவ்ய ஸூரிகள் என்றோம்; பிரமேயம் (நுவலும் பொருள்) திவ்ய தேசமே ஆகும். பிரமாணம் பிரமேயங்களைப் பார்த்த நாம் பிரமாதாக்களை நோக்குவோம். ஸ்ரீவைகுண்ட நிலையர்களாய் காலங் கடந்த தன்மையாலும், அழிவில்லாத தன்மையாலும், நிலைபெற்ற தன்மையாலும் அழைக்கப்படும் நித்ய ஸூரிகளைக் காட்டிலும் எல்லா வகையிலும் ஏற்றம் பெற்று அமைய திவ்ய ஸூரி என்று பேசப்படும் இந்த ஆழ்வார்களது மாட்சி மிகப் பெரியது.

**கீதையில் திவ்ய ஸூரி ஸூசனம்:**

கண்ணன் அன்று ஐவர் தெய்வத் தேரினில் கையில் பிடித்த சிறுவாய்க் கயிறும், கொல்லாமாக்கோலுமாய், சேனாதூளி, தூஸரிதமான திருக்குழலொழுங்கும், நாற்றிய திருவடியுமாய் இருந்து அர்ச்சுனனுக்கு அருளிய கீதையில்

> தத் வித்தி ப்ரணிபாதேன
> பரிப்ரச்னேன ஸேவயா |
> உபதேக்ஷ்யந்தி தே ஞானம் ஞானின:
> தத்வதர்சின: ||

என்று சிஷ்ய லக்ஷண பூர்த்தியுள்ளவர்களைக் கூறுகிறான்: இவர்களை அடிமை கொண்டு ஞானிகளாகிய தத்வதர்சிகள் இவர்களது ஐயம் போக்கி அறிவூட்டுவர் என்று அருளிச் செய்தான். மாணாக்கரது இலக்கணம் கூறி அத்தகைய மாணாக்கர் கட்கு (அண்மையில் பிறக்கஇருக்கும்) ஞானிகளாகிய தத்வதர்சிகள் (உபதேக்ஷ்யந்தி) உபதேசிப்பார்களென்று கூறுகின்றான். இதுகாறும் அவதரித்த, இருந்த ஞானிகள் போலன்றிக்கே தத்வதர்சிகளான ஆழ்வார்கள் உலகமுய்ய உம்பர்கள் கேட்டுய்ய உபதேசிப்பர் என்கிறான்.

**கண்ணன் பாரிப்பு :**

இத்தகைய ஞானி ஒருவனாவது தனக்கு காணக் கிடைப்பானா? கிடைத்தால் கூடுமா, ஸேவிக்கப் பெறுவேனா? என்று கண்ணன் பாரித்தான். ஆனால் கிடைக்கவில்லை. "பஹூனாம் ஜன்மநாம் அந்தே, ஞான வான் மாம் ப்ரபத்யதே"..... அநேக ஜன்மங்கள் எனது புகழைப் பாடிப்பாடி பழுத்த ஞானி ஆனன் ஒருவன் பிறக்கப் போகிறான். அதுவும் மிக அண்மையில் பிறக்கப் போகின்றான். அவனுடைய தன்மையை விவரிக்கின்றான். ஞானிக்கு இலக்கணம் கூறுகின்றான் வக்கணையாக. அவன் பேச்சில் கணக்கில்லாத ஏக்கத்தின் ரேகை படிந்தோடுகிறது. "வாசுதேவ: ஸர்வமிதி" எல்லாம் வாசுதேவன் என்று இருப்பன். "ஸ: மகாத்மா" அவன் அளப்பெரியன். 'ஸுதுர்லப:' கிடைத்தற்கரியன். எனக்கு எங்ஙனம் கிடைப்பான். இவ்வாறு சொல்லிச் சொல்லிப் புலம்புகிறான். ஆனாலும் என்ன? இவன் தன்னுடையச் சோதிக்கு (ஸ்ரீவைகுண்டத்திற்கு) எழுந்தருளி ஒரு மண்டலம் கழித்தன்றோ அந்த ஞானி அவதரித்தது. கலியும் கெடும் கண்டு கொண்மின் என்று லோகாத்தாரணம் பண்ணி அவனியை உய்வித்த மகாபுருஷன் கண்ணன் வகுத்த இலக்கியத்தின் இலக்கியமாக விளங்கியவர் நம்மாழ்வார் அன்றோ! "உண்ணுஞ் சோறு பருகு நீர், தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணன் "வாசுதேவ: ஸர்வம் இதி" என்று முழக்கம் செய்த முதுபெரும் ஞானி இவரேயன்றோ! மயர்வற மதிநலம் அருளப் பெற்ற நம்மாழ்வாரும் பூமியில் அவதரித்த கண்ணபிரானை ஸேவிக்கப் பெற்றிலோமே, ஒரு செவ்வாய் (45 நாட்கள்) பிற்பட்டோமே அந்தோ! அந்தோ! என்று வாய்வெருவுகிறார். கீதையில் உபதேக்ஷ்யந்தி என்று யாரைச் சொன்னானோ! வாஸுதேவ: ஸர்வம் இதி எல்லாம் கண்ணன் எம்பெருமான் என்றிருக்கும் ஞானி என்று யாரைச் சொன்னானோ அம் மாபுருஷர் நம்மாழ்வாரும் அவருடைய அவயவ பூதரான ஆழ்வார் பதின்மருமே ஆவர்.

**ஸ்ரீமத் பாகவதத்தில் ஆழ்வார்களது அவதார ஸூசனம்:**

கீதையில் கண்ணன் சுருக்கமாக அருளிய இதனை மகரிஷி ஸ்ரீமத் பாகவதமகாபுராணத்தில் நான்குக்கு மேற்பட்ட ச்லோகங்களால் பரக்கப் பேசுகிறார்.

> कृतादिषु प्रजा राजन् कलाविच्छन्ति
> सम्भवम् ।
> कलौ खलु भविष्यन्ति नारायणपरायणाः ॥
> क्वचित्क्वचित् महाभाग द्रमिडेषु च
> भूरिशः ।
> ताम्रपर्णी नदी यत्र कृतमाला पयस्विनी ॥
> कावेरी च महापुण्या प्रतीची च महानदी ।
> ये पिबन्ति जलं तासां मनुजा मनुजेश्वर ॥
> प्रायो भक्ता भगवति वासुदेवे अमलाशयाः ॥

'கலியுகத்தில் மக்களுக்கு உய்யும் வகை யுண்டு கொலோ உரைப்பீர்' என்ன "அஞ்சற்க நாராயண பராயணர்களான பாகவதோத்தமர்கள் காவேரி, தாம்ரபர்ணீ, மஹாநதி, பெண்ணை, பேரியாறு, பாலாற்றுக் கரைகளில் அவதரிக்கப் போகிறார்கள். கலியும் கெடும். இஃது உறுதி கண்டு கொண்மின்"— என மகிரிஷி அருளிச் செய்தார். கலியுகத்தில் இந்த நதிக்கரைகளில் அவதரித்த மகான்கள் நம்மாழ்வார் முதலிய பதின்மரேயன்றி பிறிதோருவரல்லர். பொய்கையார், பூதத்தார், பேயார் புகழ்மழிசை ஐயன் அருள் மாறன் சேரலர் கோன் துய்ய பட்டநாதன் அன்பர்தாள் தூளி நற்பாணன் நற்கலியன் ஆகிய பதின்மரே. கலியின் கோலாஹலத்தைக் குலைக்கக் குவலயத்தில் தோன்றினர். எம்பெருமானும் காண விழையும் பெருமேன்மையுடையராய் ஞானாதிகர்களாய், ஸம்ஸாரிகள் துர்கதி பொறுக்க

மாட்டாதே அவர்களைத் திருத்திக் கரை மரம் சேர்க்கப் பாடுபட்ட இப் பன்னிருவரை ஸ்ரீவைஷ்ணவ உலகம் ஆழ்வார்கள் என அழைக்கின்றது. நித்யஸூரிகளிலும் மேம்பட்டு விளங்கும் திவ்ய ஸூரிகளும் இவர்களே. இவர்களது சொல் "திவ்ய ஸூ உக்தி" களாம். இவர்கள் நடையாடின தேசம் திவ்ய தேசங்களாம். இவர்கள் அருளிய நூல் திவ்யப் பிரபந்தமாகும்.

**நம்மாழ்வாரும் நாலாயிரமும் :**

இந்த திவ்யப் பிரபந்தத்தை நாராயண பாராயணர்களான ஸ்ரீ வைஷ்ணவர்கள் தமிழ்வேதமெனப்போற்றி வழிபடுவது பிரசித்தம். "சீராரும் வேதம் தமிழ் செய்த மாறன்" என நமமாழ்வார் சிறப்பிக்கப்படுகிறார். "அத்ராகூத் திராமிடம் ப்ரும்ம ஸம்ஹிதாம்" என்று முன்னிருந்த தமிழ் வேதங்களை திராவிட ப்ரும்ஹ ஸம்ஹிதைகளைக் கண்டறிந்து பிரகாசப்படுத்தினார் என்றிறே நம்பூருவர்கள் நிர்வஹித்துப் போருவது. நம்மாழ்வாரது நான்கு பிரபந்தங்களையும் நான்கு வேதமாகக் கொள்வர். திருவிருத்தம்-ருக்வேத ஸாரம்; திருவாசிரியம் - யஜுர் வேத ஸாரம் பெரிய திருவந்தாதி - அதர்வண வேத ஸாரம்; திருவாய்மொழி ஸாம வேத ஸாரம். ஏனைய ஆழ்வார்களது பிரபந்தங்களை அங்க உபாங்கங்களாகக் கூறுவர். திருமங்கை மன்னனுக்கு நாட்பாட்டிட வந்த கோயில் அழகிய மணவாள மாமுனிகள் "மாறன் பணித்த தமிழ் மறைக்கு மங்கையர் கோன் ஆறங்கம் கூற அவதரித்த வீறுடைய கார்த்திகையில் கார்த்திகை நாள்', என்றனர். ஆக திருமங்கை ஆழ்வார் பிரபந்தங்கள் ஆறும் ஆறங்கமாகவும், மற்றவை உபாங்கங்களாகவும் அமையும் என பூருவாசாரியர் அருளிச செய்து போந்துளர். அங்கங்களுடன் கூடிய இதனை ஓதி உணர்ந்த பெரியோர்களை "தமிழ்வேதமறிந்த பகவர்கள்" எனப் போற்றினர்.



திருநாகேசுவரம் சூர்யபுஷ்கரணி - திருக்குத்தாலம் பாலசந்திரன்

**அருளிச் செயற்சிறப்பு :**

நால் வேதத்திலும் இவ்வேதத்திற்குச் சிறப்புகள் அதிகம் உண்டு. 'த்ரைவித்ய விஷ்யா வேதா:' என்று ராஜஸ, தாமஸ, ஸாத்விக அதிகாரிகளுக்கு தத்தமக்குரிய விஷயங்களைப் பேசுகிறது முதுவேதம். அதிகாரி பேதத்தாலே ஏற்பன விடுவன ஆன விஷயங்களைத் தெள்ளென வகுத்துக் கூறுமையாலும் "அனந்தா வை வேதா :" என்று வேதங்களின் பரப்பும் அளவும் எல்லையற்று கரைநிலம் காணவொண்ணாக் கருங்கடல் போல் பரந்திருப்பதாலும் ஆஸ்ரயிப்பவனுடைய முயற்சி (பரிச்ரமம்) மிக்கிருக்கச் செய்தேயும் கைமாண்டு, திகைத்த செயலற்றவனாகச் செய்யும் தன்மையுடையது. வேதத்தில் காடகம் என்ற பகுதிஉண்டு. அதில் கூறப்படும் ஒரு வரலாற்றால் இதை நன்கு உணரலாம்.

**"காடக" வரலாறும் திருவாய்மொழியும் :**

முன்பு பரத்வாஜர் என்ற மகரிஷி ஸகல வேதங்களையும், ஓதி முடிக்க வேண்டும் என்று ஸங்கல்பித்துக்கொண்டு அதற்குரிய ஆயுஸ்ஸை பெறுவதற்காக இந்திரனைக் குறித்து உபாஸனை செய்து அவனை மகிழ்வித்து மூன்று புருஷாயுஸ்ஸுக்களை வரம் பெற்றார். "பரத்வாஜ ஹோ வை திரிபிர் ஆயுர்பி : ப்ருஹ்மசர்யம் உவாஸ" ஒரு புருஷாயுஸ் என்பது நூறு வருஷம். இந்த வாழ்நாள் முழுவதும் குருகுலவாசம் செய்து வேதமோதினார். முந்நூறு ஆண்டு முடிந்தது. ஜீர்ன சரீரராய் இழந்தனமடைந்து முமூர்ஷுவாய் படுத்து இருந்த அம்முனிவரை இந்திரன் வந்தணுகி 'ஹே! பரத்வாஜ முனிவரே! மீண்டும் ஒரு புருஷாயுஸ்ஸை இப்பொழுது உமக்கு நான் தருவதாயிருந்தால் நீர் அதனை எவ்விதம் கழிக்க விரும்புகிறீர்', என்று கேட்டான். "அந்த ஆயுஸ்ஸில் நீர் சாதிக்க விரும்பும் புருஷார்த்தம் என்ன' என்று மேலும் வினவினான். அதற்கு அந்த முனிவர் "நான் வேறு என்ன செய்யப் போகிறேன். அந்த ஆயுஸ்ஸிலும் வேதாத்யயனமே செய்யக் கடவேன்" என்று கூறினார். அதைக் கேட்ட இந்திரன் "ஓ இவர் ஸகல வேதங்களையும் ஓதிவிட வேண்டும் என்று நினைக்கிறார் போலும்" என்று நினைத்து அது ஒருநாளும் முடியாத காரியம் என்பதைத் தெரிவிப்பதற்காக மூன்று வேதங்களையும் தன்னு

டைய யோக ஸாமர்த்தியத்தால் மூன்று மலைகளாக்கி இதற்கு முன் முனிவர் கண்டறியாத, மலை வடிவமான அந்த வேதங்களை அவர் கண்களுக்கு இலக்காக்கினன். பிறகு அம்மலை ஒவ்வொன்றிலிருந்தும் ஒரு முஷ்டி அளவு எடுத்து மூன்று முஷ்டி தூள்களைக் காட்டினன். "ஓ பரத்வாஜரே! இம்மூன்று மலைகளும் வேதங்கள். அதில் ஒவ்வொரு துகளும் வேதமாதலால் வேதங்களுக்கு எல்லையே கிடையாது" என்ருன். இவ்வார்த்தையைக் கேட்ட முனிவர் இதுகாறும் தாம் ஓதிய வேதம் எவ்வளவு இருக்கும் எனச் சிந்திப்பதை அறிந்த இந்திரன், 'இந்த மூன்று முஷ்டிகளில் உள்ள அளவே உம்மால் இதுவரை அத்யயனம் செய்யப்பட்டது. இதோ மலையாகக் கிடக்கும் வேதங்கள் உம்மால் ஓதப்படவில்லை. ஆகவே ஸகல வேதங்களையும் ஓதி முடிப்பது என்பது இயலாத காரியம்" என்ருர். இதனல் வேதங்களின் பரப்பு மிகுதியையும், ஓதி முடித்தலின் அருமையையும் அறியலாம். அப்பொழுது அவரிடம் இரங்கி இந்திரன் "இது ஸகல வேத ஸாரம். இதைக் கொண்டு நீர் பல சித்தி அடைவீராக!" என்று கூறி ஸாவித்ர வித்யையை உபதேசித்தான். அவன் உபதேசித்த ஸாவித்ர வித்யை திருவாய்மொழியே என்று சம்பிரதாயம் வல்ல பெரியோர் அனுக்கர்கட்கு அருளிச்செய்வர்.

**அருளிச் செயல் மாட்சி :**

வேதங்களின் பரப்பின் மிகுதியை ஒருவாறு உணர்ந்தோம். அடுத்தபடியாக பரதத்துவ நிர்ணயத்திலோ தெளிதல் மிக அருமை. "நமஸ்தே வாயோ த்வமேவ ப்ரத்யக்ஷம் ப்ருஹ்மாஸி" என்றும், 'ஏகோ ஹ வை ருத்ர:' என்றும் 'ஹிரண்ய கர்பனே முன்னுண்டானுன்' என்றும் ஓதுகையாலே முடிந்த பொருள் முடிவு தெளிதலின் அருமை பெறப்பட்டது. இவ்விடத்தில் உபவேதங்களிலும் பரச்ரமப்பட்டுத் தெளிந்த சிந்தையரான ஆசார்ய வள்ளல் வேதாந்த தேசிகன் "செய்ய தமிழ் மாலைகள் நாம் தெளிய ஓதித் தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே" என்று அருளிச் செய்தார். இவன்பாலுள்ள தெளியாமை, மயக்கம் போன்ற இவற்றை வேதங்களின் மீது ஏற்றி அவற்றுக்கோர் அவம் பறைதல் பொருந்துமோ என்னில் உலக வழக்கை ஒட்டி பொருந்தும் என்க. நிலை இடித்தது என்றும் இரயில் தவறிற்று என்றும் கூறுவது போலாம். "மாலுகந்தவாசிரியர் வாக்குக் கொவ்வா" என்றும் "அணிகுருகை நகர் மன்னர் நாவுக்கமைந்தன" என்றும் திருவாய்மொழியின் ஒப்பு மிக்கில்லாத் தன்மையை ஸ்ரீ வேதாந்த தேசிகன் பேசிப் போந்தார். மேலும் வடமொழி வேதங்களை முறையே பயின்று உணர்ந்தமையால் அது தன்னிலும் இதன் ஸௌலப்யத்தை

"யஸ்ய ஸாரஸ்வதம் ஸ்ரோதோ
வகுளாமோத வாஸிதம் |
ச்ருதிநாம் விச்ரமாயாலம் சடாரிம்
தம் உபாஸ்மஹே ||

என்றும் கூறினர். '(வேதமே கேள்) ஆழ்வாரது ஈரச் சொற்கள் தோன்றிவிட்டன. வகுளமலரின் நறுமணம் வீசும் அருளிச் செயல் பெருக்கினல் அபார்த்தங்கள் களையப்பட்டு தத்வநிர்ணயம் ஏற்பட்டுள்ளது. இனிமேல் உங்களுக்கு பரிச்ரமம் வேண்டா' என்றும் கூறினர். இவ்வாறு வேதங்களின் விடாய் தீர வேத விழுப்பொருளை வாரி வழங்கின நீர்மையை "சீரார் வேதம் தமிழ் செய்த மெய்யன் எழில் குருகை நாதன்" என்ற மாமுனிகளின் ஸ்ரீ ஸூக்தியாலும் அறியலாம். 'அத்ராக்ஷீத் த்ராமிடம் ப்ருஹ்மஸம்ஹிதாம்' என்பதை நோக்குக. தமிழ் செய்த என்றவுடன் வரி வரியாக மொழி பெயர்த்தார் என்றோ, கருத்துச் சுருக்கம் அருளினரென்றோ கொள்ளலாகாது. அந்த நான்கு வேதங்களில் களைவனக் களைந்து கொள்வன கொண்டார் என்று கொள்ளலாமோ எனின் அப்படியுமன்று. 'அந்த்தா வை வேதா:'

41 ம் பக்கம் பார்க்க

## ஆழ்வார்களின் அவதாரத் திங்கள்

" படியாய்க் கிடந்தேனும் பாதம் சேர
அடியார்க் கடியனும் " நின்ற

அவதாரபுருஷர்களான ஆழ்வார்கள் பன்னிருவரும், அவர்கள் அவதரித்த மாதங்களும் :

| | | | |
|---|---|---|---|
| 1. | மதுரகவி ஆழ்வார் | — | சித்திரை |
| 2. | நம்மாழ்வார் | — | வைகாசி |
| 3. | பெரியாழ்வார் | — | ஆனி |
| 4. | ஸ்ரீ ஆண்டாள் | — | ஆடி |
| 5. | பொய்கையாழ்வார் | — | ஐப்பசி |
| 6. | பூதத்தாழ்வார் | — | ஐப்பசி |
| 7. | பேயாழ்வார் | — | ஐப்பசி |
| 8. | திருமங்கையாழ்வார் | — | கார்த்திகை |
| 9. | திருப்பாணுழ்வார் | — | கார்த்திகை |
| 10. | தொண்டரடிப் பொடியாழ்வார் | — | மார்கழி |
| 11. | திருமழிசையாழ்வார் | — | தை |
| 12. | குலசேகர ஆழ்வார் | — | மாசி |

தொகுப்பு : "சிங்கை" மாறன்-திருவள்ளூர்.

# • • மாயத்திரை விலகும் ! • •

"மனம்" என்ற ஒன்றை நாம் பெற்றதனுல்தான் மனிதன் எனப் படுகிறோம். இந்த மனத்தின் திறனை வளர்க்கும் தந்திரத்தை மட்டும் நாம் நன்ருக அறிந்து கொண்டு, அதை நம் வசப்படுத்திக் கொள்ள முடிந்து விட்டால் நம்மால் ஆகாதது இல்லை. எண்ணியதை எண்ணியபடி, எண்ணிய நேரத்திலேயே, எண்ணிய இடத்திலேயே நம்மால் அடைந்து விடமுடியும். இந்த கருத்தையே உலகப் பொதுமறை தந்த ஒண்டமிழ்ப் புலவன் செந்நாப் போதான் தன் குறளிலே "எண்ணியர் திண்ணியராகப் பெறின்"— எண்ணிய எண்ணியாங்கு எய்துதல் முடியும் என்ருன். திருக்குறளைப் பொய்யாமொழி என்று போற்றுகிறோமே தவிர அது கூறும் ஆழ்ந்த உட்பொருளை நம்மில் பலர் சிந்தித்துப் பார்ப்பதில்லை.

எண்ணம் எனச் சொன்னவுடனேயே அதன் ஓட்டம்தான் நமக்குப் பளிச்செனப் புலப்படும். ஏனென்ருல் எண்ணத்துக்கும் செயலுக்கும் அவ்வளவு இடைவெளி. இருந்த இடத்திலிருந்தபடியே சணநேரத்தில் அமெரிக்காவிலிருக்கும் உறவினரையோ, நண்பரையோ நினைத்து அந்த இடத்துக்கு மானசீகமாகவே சென்று திரும்பிவிடமுடியும். அதனுல்தான் எண்ணத்தைத் தோற்றுவிக்கும் மனத்தின் இயக்கத்தைக் குறிப்பிடவந்த ஆன்ருேர்கள் "வாயு வேகத்தினை விடவும் பலகோடி மடங்கு துரிதமானது மனோவேகம்" எனச் சொன்னுர்கள்.

எந்தச் செயலாக இருந்தாலும் சரி, அதற்குப்பின்னணியாக இருந்து அதைத் தொடங்க வைத்து, இயக்கிப் பின் முடிக்கவைப்பது எண்ணம் தான். இந்த எண்ணத்துக்கு விவஸ்தையே கிடையாது. எதை வேண்டுமானுலும் எண்ணி விடும், நடக்கவே நடக்காது — கிடைக்கவே கிடைக்காது என்ருலும்கூட நடந்தது போலவும், கிடைத்தது போலவும் எண்ணத்திலேயே கற்பனையில் சாதனை வீரராகத் தம்மைத் தாமே பாராட்டிக் கொள்ளுகின்ற இயல்பை நாம் பார்க்கின்றோம். இந்த எண்ணத்தின் வலிமை அளவு கடந்தது. மனத்திண்மை படைத்தவராக நம்மை நாம் ஆக்கிக் கொண்டால் மலையும் மண்ணுகிவிடும். இந்த மனத்தின் திறனை வளர்ப்பதற்காகத்தான் நம் முன்னோர்களும் முனிவர்களும் எண்ணற்ற மந்திரங்களை உருவாக்கி வழங்கிச் சென்றனர். இதனடிப்படையில் தான் "மனமது செம்மையானுல் மந்திரம் ஜெபிக்க வேண்டாம்" என்ற மொழி ஏற்பட்டது. மனச் செம்மையை உண்டாக்கி — மனத்திறன் வளர்த்து நம்மை மனிதப் புனிதர்களாக மாற்றும் மகா மந்திரங்களின் அருமை பெருமைகளைப் பற்றிய விவரம் தெரியாத காரணத்தினுலும், அந்த பீஜாக்ஷரங்களின் பெற்றி புரியாத காரணத்தினுலும், அவையெல்லாம் அர்த்தமற்ற வெறும் பைத்தியக்காரப் பிதற்றல் சொற்களாக நினைத்து பல பொக்கிஷங்களை நாம் கைசோரவிட்டுக் கொண்டிருக்கிறோம். எதையுமே கண்டு, தொட்டு, உணர்ந்த பிறகு தான் நம்புவோம் என்ருல் பிறகு காணுததையும், தொடமுடியாததையும் எப்படி நம்ப முடியும்? கொளுத்தும் கோடையில், தகிக்கும் புழுக்கத்தில் தவிக்கும் நேரத்தில் சில்லெனக் காற்றுப்பட்டால்... "அடடா என்ன சுகமாக, இதமாக இருக்கிறது" என்கிறோம். சுகத்தையும் இதத்தையும் காட்ட முடியுமா, தொடமுடியுமா. "உண்ணுக்கு எல்லையின் உட்புறம் சென்ற பின் எல்லாமும் ஒன்றுதான் அண்ணே கேட்பாய்" என்று அமரர் நடாதூர் ஸ்ரீ உ.வே. வரகவி வேங்கடாச்சார்ய ஸ்வாமிகளின் "அருள் ஞானப் புலம்பல்" கூறுவது போல் இனிப்பான பண்டத்தைச் சுவைத்து உண்கின்றோம் என்ருலும் தொண்டையைத் தாண்டியதும் அனைத்துச் சுவையும் ஒன்றுதான் என்றபடி இனிப்பையும் கசப்பையும் தொட்டுப்பார்க்க முடியுமா? அன்றி — கண்டு பேசத்தான் முடியுமா! அதுபோலவே மந்திரங்


ஜோதிஷ விசாரதை
வி. பிச்சையம்மாள்
பாண்டிச்சேரி-3.


களின் வலிமையை மனத்தால் மட்டுமே உற்றறிய முடியும். தங்கக் கடத்தல்காரர்கள், எவருக்கும் தெரியாமல் எப்படியோ மறைத்து வைத்துக்கொண்டு வந்தாலும்கூட Metal Detector என்ற கருவி காட்டிக் கொடுத்துவிடும் என்பதை விஞ்ஞானம் என்கின்றோம். அந்த விஞ்ஞானப் புதுமையை செயல்படுத்தி அம்மாதிரி ஒரு கருவியைக் கண்டுபிடித்தவன் அதற்கு முன்பாக அப்படிமுடியும் எனச் சொன்னபோது நம்பாமல் கேலியாகப் பார்த்தனராம். அந்தக் கருவியைக் கண்டுபிடிக்கத் தூண்டி விட்டது ஒரு எண்ணம்; அந்த எண்ணத்தின் வலிமை ஒரு புதுமை. ஆனுல் கருவி எவற்றின் உதவி இல்லாமலேயே அடிமன ஆழத்தில் புதைந்து கிடக்கும் அந்தரங்கங்களை ரகசியங்களை அவர்களின் வாயாலேயே சொல்லச் சொல்லித் தெரிந்து கொள்ளும் மெஸ்மெரிசத்தை, ஹிப்நாடிசத்தை மற்றும் மனநோய்

மருத்துவரின் முயற்சிகளை நாம் இன்று பார்க்கிறோம். இதற்கு எது உதவியாக உள்ளது? இது எப்படி அவர்களுக்குச் சாத்தியமாகிறது? மனத்திறனும், ஒருமுகப்படுத்தப் பட்ட அவர்களின் எண்ண வலிமையுமே காரணம்.

இந்த மாதிரியான முயற்சி கூட இல்லாமல், பார்த்த மாத்திரத்தில் நினைத்த மாத்திரத்தில் அந்த நினைவுகளின் ஓட்டத்துக்கும் முன் சென்று நின்று மறித்து எண்ணங்களைப் படிக்கும் கலையில் வல்லார் ஏராளமானோர் இங்கு நம் மண்ணில் இருந்தார்கள், இருக்கவும் செய்கிறார்கள். Thoughts reading எனப்படும் இந்த டெலிபதி (Telepathy) நமக்குக் கைவருமா, நம்மால் முடியுமா என நாடித்தேடி ஓடி அலையவேண்டாம். அந்த சக்தி தானாகவேநம்மைத்தேடி- நம்மை நாடி ஓடி வரும் என்கின்றனர் நம் நாட்டு ஆன்ம ஞானிகள். ''எவனொருவன் கடமை தவறாதவனாக, சந்தியாவந்தனாதிகளைச் செய்து, காயத்ரி மஹாமந்திரத்தை விடாது ஜபித்து வருகின்றானோ அவனது பிராணாயாம பலம், அவனுக்கு ஓஜஸை அளிக்கிறது. அந்த ஓஜஸே அவனுக்கு நல்ல தேஜஸாக மாறி அறிவையும், ஆற்றலையும், மனத் திண்மையையும் வழங்குவதோடு, பிற மனங்களைப் பீடித்திருக்கும் கவலைகளையும் நீக்க உதவும் சக்தியையும், வாக்பலிதத்தையும், மன ஓட்டங்களை எளிதில் அநாயசமாக அறிந்து கொள்ள வைக்கும் திறனையும் தோற்றுவிக்கிறது. வெறும் பிராணாயாமத்தையும், காயத்ரி மஹாமந்த்ரஜபத்தையும் மட்டுமே விடாது கைக்கொண்டிருப்பவனைக் கண்டமாத்திரத்திலேயே துர்த்தேவதைகளின் கடூர சக்தி சமனமாகின்றன. தீய சக்திகள் கரைந்து விலகுகின்றன'' என்று தமது ''மந்த்ர ராஜம்'' என்ற நூலிலே நடாதூர் ஸ்வாமிகள் கூறுகிறார். ''நோற்றலின் ஆற்றல் தலைப்பட்டார்க்கு கூற்றம் குதித்தலும் கைகூடும்'' என்று திருக்குறள் வலியுறுத்துவதும் இதையே.

உறங்குகின்ற ஒருவன் தனது கனவிலே காண்பவைகளுக்கு ஏற்ப, சிரிக்கவோ, பயப்படவோ, இன்பமடையவோ, பிதற்றவோ செய்வதை நாம் பார்க்கின்றோம். உறக்கம் கலைந்து விழிக்கும் வரை அவன் கனவில் காண்பதையே நிஜம்என்று நம்புகிறான். தூக்கம் கலைந்த பிறகே ''அடச்சே'' எனச் சூழ்நிலையைப் புரிந்து கொள்கிறான். ஆக எந்தச் செயலும் இல்லாமலேயே, படுத்த நிலையிலேயே, அவன் பிறரால் துன்புறுத்தப்படுவது போல பதைக்கிறான், சுவையான உணவை உண்டது போல மகிழ்கிறான், அழுகிறான், புலம்புகிறான், பிதற்றுகிறான். இப்படி உணர்ச்சிக் கொந்தளிப்பின் பிடிப்பில் சிக்க வைத்து வேடிக்கை பார்ப்பது ''மனம்'' தான். ஏவல் பில்லி, சூன்யம், வைப்பு, கெட்ட ஆவிகளின் பிடிப்பு போன்றவற்றின் தாக்குதலுக்கு ஆளாவோரின் நிலையும் கூட இம்மாதிரியான கனவு போன்ற மாய்கைப் பிடிப்புதான். கனவு கலைந்த பிறகு தெளிவு வருவது போல இந்தப் பாதிப்பின் பிடிப்பு மனத்திலிருந்து விலகும் போது மறுபடி சுய ப்ரக்ஞை வருகிறது. நம்முடைய வாழ்க்கையையேகூட இத்தகைய ஒரு கனவு நிலைதான் என்று பெரியவர்கள் கூறுவர். தூக்கத்தில் எப்படி நாம் கனவில் காண்பவைகளுக்கு ஏற்ப உணர்ச்சிவசப்பட்டுப் பிறகு விழித்ததும் நிலைமையை உணருகிறோமோ அதே போலவே நமக்கு மரணம் சம்பவித்து இந்த தேகத்தை விட்டு ஆத்மா விடுதலை அடைந்ததும்தான் நம்முடைய இப்போதைய வாழ்க்கை நமக்குக் கனவு என்பது புலப்படும் என்கின்றனர் ஆன்றோர்கள். இந்த அடிப்படையில்தான் நீயும் பொய், நானும் பொய், இந்த வாழ்க்கையே பொய் ஆக ''வாழ்வே மாயம்!'' என நம் மூதாதையர்கள் உணர்ந்து— அநித்யமான இந்த வாழ்க்கையை சதம் என நம்பி, வாழ்கின்ற சொற்ப காலத்திற்குள் பொய், வஞ்சம், பொறாமை, சூது, பிறரைக் கெடுத்தல் எனத் தீமைகளைச் செய்து'எதற்காகப் பாபத்துக்கு உங்கள் ஆத்மாவை அடிமைப் படுத்தி உங்களை நீங்களே நரகில் ஆழ்த்திக் கொள்கிறீர்கள்' என்றார்கள். இதற்காகத் தான் எதைச் செய்தாலும் ''ஸர்வம் ஸ்ரீ க்ருஷ்ணார்ப்பணம்'' என்றனர். இறைவனுக்குப் புனிதமானதைத் தானே அர்ப்பணிப்போம்.

மனத்தைத் தூய்மையாக வைத்துக் கொண்டாலேயே அங்கு தெய்வீகப் பொலிவு தன்னால் வந்துவிடும்; சுத்தம் நிறைந்த இடம், நிறைவை அளிக்கும், பொலிவு எனும் தேஜஸைத்தரும். "Cleanliness is next to Godliness" எனும் முது மொழி இதன் அடிப்படையில் எழுந்தது தான். அதனாலேயே அகத்தூய்மை பெற ஆண்டவனை வழிபடும் மந்திரங்களில் மனத்தை ஒருமுகப்படுத்துகிறோம். ஒருமுகப்படுத்தப்படும் போது அதற்கு வலிமை அதிகமாகிறது. அதன் சக்தி அளவு கடந்ததாகிறது. இப்படி மனத்திறன் வளர்க்கும் மந்திரங்களில் தலையாயது ''காயத்ரி மஹாமந்த்ரம்''. அதனால் தான் ''காயத்ரிக்கு மிஞ்சின மந்திரமில்லை, கேசவனுக்கு மிஞ்சின தெய்வமில்லை'' எனப் பெரியோர்கள் கூறினர். வேத மந்த்ரங்களிலேயே காயத்ரியைக் காட்டிலும் சிறந்தது வேறு எதுவே இல்லை. இதை அநுசந்திப்பவர்களின் கண்களிலே, அது தரும் பார்வையிலே, அவர்களின் தோற்றத்திலே, அசாதாரணமான மரியாதைக்குரிய காந்த சக்தியை நம்மால் தெரிந்து கொள்ள முடியும். புத்தி சாதுர்யம், சமயோசிதம், எந்த நிலையிலும் மனம் இடிந்து போகாத திண்மை முதலியன அவர்களுக்கு உண்டாகிறது. ''ப்ரத்யக்ஷப்ரமாணம்—அநுமானப்ரமாணம்'' போன்ற எதாலும் அவ்வளவு சுலபத்

தில் தெரிந்து கொண்டுவிட முடியாத "நிறைபொருள்" தத்துவத்தை— காயத்ரி மஹாமந்த்ரசித்தி பெற்ற வர் அநுபவபூர்வமாக அறிந்துகொள்ளும் பேறு கிடைக்கிறது.

'காயந்தம் த்ராயதே இதி காயத்ரி' என்ற சத்திய வசனப்படி, even under the shower of bullets அது அவனை கவசமாக இருந்து காக்கிறது என்பதை அநுபவ பூர்வமாக உணர்ந்தோரால் மட்டும்தான் தெரிந்து கொள்ள முடியும். இந்த உண்மையின் குரலுக்கு எழுந்ததுதான் 'நகாயத்ர்ய: பரோ மந்த்ர:' என்ற அநுபவ மொழி. காயத்ரி மந்த்ர சித்தியைப் பெற்றவர் 'நடமாடும் அருளாளர்' என்று சொல்ல வேண்டும். அவர் சொல்லும் சொல்லுக்கு "விதி"யே தழைந்து, வளைந்து, திசைமாறி விலகிச் செல்லுகின்றது. பிறர் துக்கத்தை நீக்கவும், துயரத்தை மாற்றவும், மன பீதியை அகற்றவும் அவரால் முடிகின்றது. பிரம்மத்தை அறிந்து கொள்ளும் பாதையிலே அவனை அழைத்துச் செல்லும் ஆத்ம ஜோதியே காயத்ரி. நான்கு வேதங்களுக்கும் மேலான இந்த காயத்ரி மஹாமந்த்ரம் தர்ம, அர்த்த, காம, மோக்ஷமெனும் நான்கையும் வழங்குகிறது. இவனின் பார்வை பெறும் ஜீவராசிக்கு புனிதம் ஏற்படுகிறது. கற்பனைக்கும் எட்டாத will power உண்டாகிறது. துர்த்தேவதைகளால் பீடிக்கப் பெற்றிருப்போர் பழைய நிலைக்குவர காயத்ரி மந்த்ர அனுஷ்டானம் செய்பவரைத் துணையாகக் கொள்ள வேண்டும். டாகினி, காகினி, சண்டி, சாமுண்டி, கஷ்மாரா, லோலாக்ஷி, ஸர்வபக்ஷா, ஸஹஸ்ராக்ஷி, விச்வக பாலா போன்ற அனைத்து தேவதைகளும் இவரின் வாக்குக்குக் கட்டுப்படும். ஓதாமலேயே ஸகலவற்றையும் உணர்ந்து கொள்ளும் ஆற்றலும், நினைப்பதை அறிந்து கொள்ளக் கூடிய ஞான த்ருஷ்டியும் படிப்படியாக இவருக்குக் கைவருவதோடு, ஒரு செயல் நடப்பதற்கு முன்பே தெரிந்து விடும் சக்தியும், தொலைவின் உணரும் மனவலிமையும் தன்னால் இவரைச் சேரும். இந்த மந்த்ரானுஷ்டானத்துடன், யந்த்ர பூஜையை மேற்கொள்வதால் உண்டாகும் பெருமை, அருமை அளவிடற்கரியது. ●

# தெய்வத் தமிழின் சிறப்பு

புலவர் கோ. இளையபெருமாள், ஆரணி.

(வெண்பா)

தெய்வத் தமிழின் சிறப்பை உணர்தற்கு
உய்வைத் தரும்நூல் உளவாகும்—மெய்வைத்த
தோத்திரமும் சாத்திரமும் தோன்றவிரிக் கிற்பெருகும்
பாத்திரத்தால் கூறுவனன் பால்.

ஞானப்பால் உண்டதிரு ஞானசம் பந்தர்நம்
ஊனப் பிறவியற ஓதியருள் — தேனமுதாய்த்
தித்திக்கும் செய்யதமிழ்த் தேவாரப் பாவனைத்தும்
முத்திக்கு வித்தாம் மொழி.

நீரும் நெருப்பும் நிலமும் பசுந்தமிழின்
சீரும் சிறப்பும் தெரிந்துணர்த்தும் — பாரில்
நிலையாக நீதி நெறிகாட்டி வாழும்
கலையாக நிற்கும் கடல்.

அப்பர் பெருமான் அருந்தமிழைப் போற்றிசெயும்
ஒப்பரிய தொண்டால் உலகத்தில் — செப்பரிய
நாவுக் கரசென்னும் நற்பெயரைப் பெற்றுயர்ந்தார்
தேவுக் கிறையருளால் தேர்ந்து.

முதலையுண்ட பாலன் முழுவடிவம் தாங்கி
அதிசயமாய்த் தோன்ற அழைத்தே — உதவிபல
தோழமையால் பெற்றரனைத் தூதனுப்பிச் சுந்தரனார்
தாழுமுயர் தெய்வத் தமிழ்.

திருவா சகமென்னும் தெய்வத் தமிழ்நூல்
ஒருவா சகத்தை உரைக்கின் — உருகாத
கல்லுங் கரைந்துருகும் காதலினால் ஓதிடுவோம்
சொல்லுல் பொருளும் சுவைத்து.

(எண்சீர் விருத்தம்)

கணிகண்ணன் காஞ்சிநகர் கடந்து செல்லக்
கண்டவுடன் தமிழின்மேல் காதல் கொண்டு
மணிவண்ணன் பின்சென்று மதித்துப் பாடும்
மனங்கவரும் பைந்தமிழை மாந்தி நின்றான்.
பணிவுடைய ஆழ்வார்கள் பரவிப் போற்றிப்
பத்தியொடு பாசுரங்கள் பாடி நின்றார்
அணியணியாய்ச் சமயநெறி அழைத்துச் செல்லும்
அருளாளர் தொண்டின்சீர் அளக்க லாமோ?

தமிழ்என்னும் மூன்றெழுத்தைச் சுற்றுங் காலை
தனித்தனியே மூவினமும் சார்ந்து நிற்கும்
தமிழிறையாம் முருகென்னும் தலைவன் பேரும்
தனக்குள்ளே மூவினமும் தாங்கி நிற்கும்
தமிழ்முனியோ டருணகிரி தக்கார் பல்லோர்
தமிழ்விரித்த முருகனருள் சாலப் பெற்றோர்
அமிழ்தான தமிழ்மொழியில் அருளும் நன்னூல்
அருந்தமிழில் விருந்தாக அமையும் நன்றே

மொழியினையே தெய்வமென மொழியும் சீர்த்தி
முத்தமிழுக் கேவுரிய முதன்மை யாகும்
விழியில்லாப் புலவோரும் விரைந்து பாடி
வீறுடனே தெய்வநெறி விளங்கச் செய்தார்
அழிவின்றிப் பரம்பொருள்போல் அமைந்து நிற்கும்
அருந்தமிழைக் கற்றுணர்ந்தே அடங்கி நிற்போர்
வழுவின்றி இருமைநலம் வாய்க்கப் பெற்றே
வழிவழியே இறையருளால் மன்னி வாழ்வார்.

# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# நன்கொடை திட்டத்தின் கீழ் குடில்கள்

திருமலையில் யாத்திரிகர்களின் வசதியை மனதிற்கொண்டு, அங்கு மேலும் பல தங்கு வசதிகளை அமைத்துத்தர தி. தி. தேவஸ்தானம் முழு முயற்சியை மேற்கொண்டுள்ளது. இவ்வகையில், பக்தர்கள் மற்றும் பரந்தமனப்பான்மை கொண்ட யாத்திரிகர்களின் கூட்டு முயற்சியுடன் தன் நன்கொடை திட்டத்தின் கீழ் மேலாண்மை இம்முயற்சியில் இறங்கியுள்ளது.

யாத்திரிகர்களின் பயன் கருதி, பல்வேறு திட்டங்களின் விவரங்கள் கீழ்வருமாறு கொடுக்கப் பட்டுள்ளன.

## கருடாத்ரி நகர் குடில்கள் திட்டம்

இத்திட்டத்தின்கீழ் கட்டடத்தின் அடித்தளத்திலும், முதல் தளத்திலும் ஒவ்வொன்றும் 4 அறைத்தொகுதிகள் கொண்ட 16 குடில்கள் கட்டப்படும். ஒவ்வொரு அறைத்தொகுதியிலும் குளியலறை மற்றும் பொதுத் தாழ்வாரம் உள்ளடங்கிய 10 X 12 அடி என்ற அளவு கொண்ட அறை இருக்கும். 320 அடி சதுர அளவு கட்டட அறைகொண்ட ஒவ்வொருஅறைத்தொகுதிக்கான நன்கொடை ரூ. 30,000 மட்டுமே ஆகும்.

128 அறைத்தொகுதிகளில் 66 அறைத்தொகுதிகளுக்கான நன்கொடை ஏற்கெனவே பக்தர்கள் அளித்து விட்டார்கள்

8 அறைத்தொகுதிகளின் ஒரு தனிக்குடிலுக்கு ரூ. 2.4 இலட்சம் அல்லது 4 அறைத்தொகுதிகளுக்கு ரூ. 1.2 இலட்சம் அல்லது இரண்டு அறைத் தொகுதிகளுக்கு ரூ. 60,000/- என்ற வகையில் நன்கொடை அளிக்கலாம்.

## ராம் பகீச்சா விருந்தினர் விடுதிகள் திட்டம்

கோயிலின் வடகிழக்கு திசையில் ராம் பகீச்சாவில் மூன்று விருந்தினர் விடுதிகள் கட்டுவதென்று முடிவுசெய்யப்பட்டுள்ளது. ஒவ்வொரு விருந்தினர் விடுதியும் ஒவ்வொன்றும் 50 அறைத் தொகுதிகள் கொண்ட மூன்று தளங்களைக் கொண்டு விளங்கும் குளியலறை வசதியுடன் கூடிய 14 X 16 அடி அளவு கொண்ட அறைகளை ஒவ்வொரு அறைத்தொகுதியும் கொண்டு விளங்கும். 600 சதுர அடி கொண்ட இவை பொது தாழ்வாரம் ஒன்றினைக்கொண்டு விளங்கும். ஒவ்வொரு அறைத்தொகுக்கான நன்கொடை ரூ. 60,000/-ஆகும். மொத்தம் 450 அறைத்தொகுதிகளில், 37 அறைத்தொகுதிகளுக்கான நன்கொடை ஏற்கெனவே வழங்கப்பட்டுள்ளன.

## பயன்கள்

1. கட்டடத்தில், நன்கொடையாளர்களின் பெயர் பொறிக்கப்பட்டுள்ள கருங்கற் பலகை வைக்கப்படும்.

2. நன்கொடையாளர்கள் வருடத்தில் (ஜனவரி முதல் டிசம்பர் வரை) நன்கொடை அளிக்கப் பட்டுள்ள குடில்களில் ஒரு தடவை தங்கும்போது 10 நாட்களுக்கு மிகாமல், 60 நாட்களுக்கு இலவசமாகத் தங்கலாம்.

3. குடில்கள் ஒதுக்கப்படும்போது, நன்கொடையாளர்களின் உறவினர்களுக்கு முதலிடம் கொடுக்கப்படும்.

4. நன்கொடையாளர்கள் கேட்கும்போது, அவர்கள் பெயரில் உள்ள குடில்கள் காலியாக இல்லாவிடில், அவர்களுக்கு வேறு தங்கு வசதிகள் செய்து தரப்படும்.

நிவேதனம் செய்யப்பட்டப் பயிற்றஞ்சுண்டலைப் பாத்தி கட்டி விதைத்துப் பயிராக்கிப் பலன் பெறச் செய்தார்! இடுகாட்டில் எரிந்து கொண்டிருந்த சவத்தின் புகையை நறுமணங் கமழச் செய்தார்! திருமஞ்சனக் குடத்தை உயர வீசி எறிந்து, ஆகாயத்திலேயே நிற்க வைத்தார்! எதிரில் வந்த பிணத்தை உயிர் பெற்றுச் சிறிது தூரம் நடக்கச் செய்தார்!

ஆன்மாக்கள் உய்யும் வண்ணமே உலகில் தோன்றிய அருளாளர்கள் அநேகம்! தன் நலங் கருதாதுப் பிறர் நலமே பேணி நல்வாழ்க்கைக்கு நற்பாதையைத் தேடிக் கண்டுபிடித்து அமைத்துக் கொடுத்தவர்கள்! தேவாரம், திருவாசகம் போன்ற இனியப் பாசுரங்கள் மூலம், பரமனைப் பாடிப் போற்றினோர் சைவ சமயக் குரவர்கள்! பன்னிரு திருமுறைகளில் ஒன்பதாம் திருமுறையான திருவிசைப்பாவை அருளிச் செய்தோர் ஒன்பது பேர்கள்! அவர்கள் திருமாளிகைத் தேவர், சேந்தனார், கருவூர்த் தேவர், நம்பிகாடநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனார், புருடோத்தமநம்பி, சேதிராயர் என்போர். அவர்களில் மேற்சொன்ன அற்புதங்கள் நிகழ்த்தியவர்தான் திருமாளிகைத் தேவர் என்னும் சிவநேசச் செல்வர்!

# திருமாளிகைத் தேவர்

''மயூரப்ரியா'-சீர்காழி.

தஞ்சை மாவட்டத்திலுள்ள திருவாவடுதுறை யென்ற திருத்தலத்தில் ஞானயோக சாதகரான போகர் என்னும் சித்தரைத் தம் பரம குருவாகக் கொண்ட திருமாளிகைத் தேவர். திருவிடைமருதூரில் சைவராயர் மரபில் தோன்றியவர். இவரது முன்னோர்கள் வாழ்ந்த மடம் 'மாளிகை மடம்' எனப்பட்டதால், இவருடைய பெயரும் அதனையொட்டியே 'திருமாளிகைத் தேவர்' என்றாயிற்று!

திருமாளிகைத் தேவரும், இவருடனிருந்த மற்றோர் சீடரான கருவூர்த் தேவரும், தம் குருவான போகநாதரிடம் ஆராதனைக்கிரமங்களை நன்கு பயின்றனர். போகர், திருமாளிகைத் தேவருக்கு, ஸ்ரீநடராஜப் பெருமானை பூஜை செய்யும் முறையையும், கருவூர்தேவருக்கு பராசக்தியைப் பூஜிக்கும் செயல்முறைகளையும் உத்தேசித்தருளினார்.

ஒரு சமயம் திருமாளிகைத் தேவர், தாம் ஸ்ரீநடராஜப்பெருமானை பூஜித்த நிர்மால்யத்தைக் கருவூர்த் தேவருக்குக் கொடுத்தார். கருவூர்த்தேவரும் அதனை வாங்கிக் கொண்டார். தாம் பராசக்தியைப் பூஜித்த நிர்மால்யத்தைத் திருமாளிகைத் தேவருக்களிக்க, அவர் அதனை மறுத்து விட்டார்! எனவே, மனம் மிக வருந்தி, இதனைத் தம் குருவான போகரிடம் எடுத்துக்கூற, போகரும் திருமாளிகைத் தேவர் செய்ததே சரியென்றும், கருவூர்த்தேவரளித்ததை மறுத்ததில் குற்றமொன்றுமில்லையென்றும், ஈசனைப் பூசிக்கிறதே சிறந்ததென்றும் கூறி, கருவூர்த் தேவருக்கு ஆறுதல் கூறினார். கருவூர்த்தேவரும் மனம் தேறி, திருமாளிகைத் தேவரைப் போற்றி வணங்கி, உடனிருந்து வந்தார்.

ஒருநாள், திருமாளிகைத் தேவரிடம் தமது பாதுகையை அளித்துவிட்டு, அதனைப் பூசித்துக்கொண்டு திருவாவடுதுறையிலேயேயிருந்து கொண்டு அன்பர்களுக்கு அருள் வழங்குமாறு பணித்துவிட்டு, போகர் அத்தலத்தினின்றும் நீங்கித் திருப்புகலூர் என்னும் திருத்தலம் சென்றடைந்தார். குரு வார்த்தைக்கு மறு வார்த்தை ஏது? திருமாளிகைத் தேவரும், அவ்வண்ணமே ஓர் மடம் ஆக்கிக்கொண்டு, ஆலயத்தின் தென்புறம் தங்கினார். தில்லையம்பதி சென்று ஆனந்தக்கூத்தனைத் தரிசித்துக்கொண்டும், திருவாவடுதுறை வாழும் ஸ்ரீ மாசிலாமணி ஈஸ்வரரையும் தரிசித்து, அவ்விடங்களில் திருவிசைப்பாக்கள் பாடித் தங்கி வந்தார். அப்போதுதான் ஒன்றன்பின் ஒன்றாகப் பற்பல அற்புதங்களைத் திருமாளிகைத்தேவரால் நிகழ்த்த நேர்ந்தது. திருமஞ்சனக்குடம் உயரே ஆகாயத்தில் நிலைத்து நிற்க, எதிரே வந்த பிணம் உயிர்பெற்று சற்று தூரம் நடக்கலாயிற்று! அவ்வரலாற்றினைக் காண்போம்!

ஒருநாள், திருமாளிகைத் தேவர் காவிரியில் நீராடி, பூஜைக்கு வேண்டிய புஷ்பங்களைப் பறித்துக் கொண்டு, திருமஞ்சனக் குடத்தில் நீர் நிரப்பிக்கொண்டுத் தம் திருமடத்துக்குத் திரும்பிக் கொண்டிருந்தார். பாதையோ மிகவும் குறுகலானது. ஒதுங்குவதற்குக் கூட இடமில்லை! அவ்வமயம் எதிரே அநேகர் ஒரு சவத்தைத் தாங்கிக் கொண்டு சாப்பறை முழக்கிக் கொண்டு வந்து கொண்டிருந்தனர். இதனைக் கண்ணுற்றத் திருமாளிகைத்தேவர், தமது ஆசாரம் கெட்டுவிடக்கூடாதேயென்றஞ்சித் திருமஞ்சனக் குடத்தினையும் மற்றதனையும் ஆகாயத்தில் வீசியெறிய, அவைகளனைத்தும் அங்கேயே நிற்க வைத்துவிட்டு, வழியில் வீற்றிருந்த விநாயகப்பெருமானை வழிபடவே,

அவர் திருவருளால், இடுகாட்டுக்குப் போய்க் கொண்டிருக்கும் பிணமும் உயிர் பெற்றெழுந்து, நடந்து செல்லலாயிற்று! அனைவரும் வியந்து பாராட்டினர்! விநாயகப் பெருமானும் 'கொட்டுத் தவிர்த்த விநாயகர்!' என்ற பெயர் கொண்டார்!

மகப்பேறில்லாத வேதியர்கள் குடும்பத்துப் பெண்மணிகள், திருமாளிகைத்தேவரைத் தெய்வாம்சமாகவே கருதி வந்து அவரை மனதில் தியானித்து வர, மகப்பேறுண்டாகி, அவர்கள் பெற்ற குழந்தைகள் அனைத்தும் திருமாளிகைத் தேவரைப் போலவே இருந்தமையால், கணவன்மார்கள் ஐயமுற்று, நரசிங்க மன்னன் என்ற பல்லவ மன்னனின் சிற்றரசனிடம் முறையிட்டனர்! மன்னன் சினந்துத் தம் ஏவலர்களை யனுப்பித் திருமாளிகைத்தேவரைக் கட்டியிழுத்து வரும்படி பணிக்க, அவர்களும் திருமாளிகைத்தேவரை அணுகியதும், மதிமயங்கித் தங்களையே ஒருவர்க்கொருவர் கட்டிப் பிணைத்துக்கொண்டு மன்னன் முன் போய் நின்றனர்! மிகச் சினந்த மன்னன் படைகளையனுப்ப, அவர்கள் ஒருவர்க்கொருவர் சண்டை போட்டுக்கொண்டு வெட்டிக் கொண்டு மாய்ந்தனர்! மன்னன் இதையறிந்து, நால்வகைப் படைகளுடன் தானே நேரில் படையெடுத்து வந்து சேர்ந்தான்!

சிவனாரின் திருவருளைப் பரிபூரணமாகப் பெற்ற திருமாளிகைத் தேவருக்கு, குருவருளும் கை கொடுக்க, அம்பிகை ஒப்பிலாயம்மையிடம் பிரார்த்தித்து முறையிட, அம்பிகையும் தன் திருக்கோயில் மதிலிலிருக்கும் நந்திகளையெல்லாம் அழைத்து, ஓர் பெரிய நந்தியாக்கி, மன்னனின் படைகளையெல்லாம் அழித்து, மன்னனையும் மற்றோர்களையும் கட்டிப் பிணைத்து இழுத்து வரும்படிப் பணித்தனள்! நந்திதேவரும் அவ்வண்ணமே பலரும் வியந்து போற்றும் வண்ணம், படைகளை முறியடித்து, மன்னனையும் அமைச்சர்களையும் இழுத்து வந்து நிறுத்தினார்! மன்னனும் மந்திரிகளும் திருமாளிகைத் தேவரின் அடிபணிந்துத் தம் பிழையைப் பொறுத்தருளும்படி வேண்டி நிற்க, திருமாளிகைத்தேவரும் மன்னனையும் மற்றோர்களையும் மகிழ்ந்து, மன்னித்து, இறைவன் திருவருளையும் குருவருளையும் எண்ணிப் போற்றி மகிழ்ந்திருந்தனர்!

இதனையொட்டியே திருவாவடுதுறை திருக்கோயிலில் மதிலில் நந்திகளே கிடையாது! ஈஸ்வரன் முன்புதான் பெரிய வடிவில் ஓர் நந்தியிருக்கிறது.

இதுவுமன்றித் திருமாளிகைத் தேவர் இன்னும் பல அற்புதங்களை நிகழ்த்தியுள்ளார்! சுடுகாட்டில் எரிந்து கொண்டிருந்த பிணத்தின் துர்வாசனையை நறுமணங்கமழும் படிச் செய்தார்! கொங்கணவர் என்ற சித்தருடைய கமண்டலத்தில் ஒருக்காலும் வற்றாத நீரை வற்றச் செய்தார்! ஈசனார்க்குப் படைத்த பயிற்றஞ்சுண்டலைத் தம் திருமடத்தில் பாத்திகட்டி விதைத்துப் பயிராகிப் பலன் பெறச் செய்தார்! திருவிழிமிழலையிலிருந்தபோது அங்கு ஓடாதிருந்த தேரை, வடத்தைக் கழிற்றிவிட்டுத் தானாகவே அதனை ஓடச் செய்தார்!

கி. பி. 9-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த திருமாளிகைத்தேவர் தில்லையம்பல ஆனந்தக்கூத்தனின் பேரில் இயற்றிய 'திருவிசைப்பா' பாசுரங்கள் நான்கு!

குருவருளும் திருவருளும் வாய்க்கப்பெற்றத் திருமாளிகைத்தேவர் குருபூஜையிலும் சிவபூஜையிலும் மிகவே ஈடுபட்டவராய்த் தமது வந்தனை வழிபாடுகளுக்கு இரண்டு கைகள் போதாதென்று கருதித் தம் தவ வலிமையால் மேலும் இரண்டு கைகள் உண்டாக்கிக் கொண்டார் என்பதிலிருந்து, அன்னாரது குரு பக்தியும் தெய்வபக்தியும் அளவு கடந்ததென்று நாம் ஊகித்துக் கொள்ளலாம்! இதை நினைவூட்ட, திருவாவடுதுறை ஆதீனத் திருமடத்துள்ளிருக்கும் இவர் திருவுருவம் நான்கு கரங்களுடன் அமைந்துள்ளது.

ஸ்ரீ கோமுக்தீஸ்வரருக்கு உச்சிக் கால பூஜைக்குப் பின்னர், திருமாளிகைத் தேவருக்கும் அபிஷேக, ஆராதனைகள் நடைபெற்று வருகின்றன வெனில், அன்னாரின் பெருமை அளவற்றதன்றோ! O

## அறிவிப்பு

திருமலையில் கல்யாணோற்சவம் போன்ற ஆர்ஜித சேவைகளுக்காக பக்தர்களால் எம்.ஓ. மூலம் அனுப்பப்படும் தொகையை தி. தி. தேவஸ்தானம் ஏற்றுக் கொண்டாலும், அம்முறை சில நிருவாக சிக்கல்களையும், கால தாமதத்தையும் ஏற்படுத்துவதால், பக்தர்கள், அனுப்ப வேண்டிய தொகையை டி. டி. (D. D.) மூலம் அனுப்பினால் மேலாண்மைக்கு அம்முறை உதவியாக அமையும். மேலும் ஆந்திரா வங்கி மற்றும் சில வங்கிகள் இது போன்று தி. தி. தேவஸ்தானத்தின் பெயரில் வழங்கப்படும் டி.டி.களுக்கு எவ்விதக் கட்டணமும் பெற்றுக் கொள்வதில்லை.

# அதர்வண வேதத்தின் உண்மைகள்

அதர்வண வேதத்தை அதர்வணமெனவும் அங்கிரஸம் அதர்வாங்கிரஸ எனவும் அழைப்பார்கள். ரிக்வேத காலத்தில் இருந்த அதர்வணன், அதர்வாங்கிரஸன், பிருகுவாங்கிரஸன் என்ற சான்றோர்கள் இதன் உண்மைகளை அதிகமாய் அறிந்திருந்தபடியால் அதர்வவேதம் அவர்கள் பெயரால் அழைக்கப்பட்டிருக்கலாம். இதைப் பிரம்ம வேதம் என்றும் கூறுவர். யக்ஞம் செய்யும் காலத்தில் ஹோதாவான ருக்வேதி சொல்பவனாகவும், உத்காத்ரீயான ஸாமவேதி பாடுபவனாய், யஜுர் வேத அத்வர்யு யக்ஞம் செய்பவனாய், அதர்வவேதி வழிகாட்டியான பிரமனாய் இருந்ததால் இதை பிரம்ம வேதம் அல்லது இகபரம் இரண்டையும் அறிவிக்கும் வேதமென்று கூறுவர்.

அதர்வண வேதத்தைக் காலத்தால் மிகவும் பிற்பட்டது என்று ஒரு சாரார் கூறுவர். ஆனால் இக்கூற்று சரியல்ல. ஏனெனில் வேதங்களில் முதன்மையான கிரியை யக்ஞம். அந்த யக்ஞத்திற்கு பிரதான புருஷன் பிரமன் எனும் புராதன புரோகிதனை அதர்வணனேயாகும். வேத காலத்தில் யக்ஞம் இருந்தது. எனவே அப்போதே அதர்வமும் இருந்துதான் இருக்க வேண்டும்.

ஆதியில் அதர்வவேதம் என்ற ஒன்று தனிமையாகக் கருதப்படவில்லை. மூன்று வேதங்களின் அம்சமும் இதில் காணப்படுகிறது. ரிக்வேதத்தின் 1,200 ரிக்குகளை இதில் காணலாம். யஜுர், ஸாமம் ஆகியவைகளின் ஸூக்ஷ்மங்களும் இதில் உண்டு. பிரமசர்யத்தின் மஹிமை பற்றியும், விவாஹம், அந்திம காலம், துறவறம், நோய்களினின்று விடுபட வழி ஆகியவைகளை அதர்வம் விரிவாகக் கூறுவதால் ஏனைய மூன்று வேதங்கட்கும் இதையே வழிகாட்டி என்றும் பெரிய வேதம் என்றும் கூறலாம்.

அதர்வம் அதர்மமான வேதம் என்று சிலர் சொல்ல நாம் கேட்கிறோம். ஆனால் இது தவறு. சுமார் கி. பி. 1575ல் பஹலான் என்னும் ஒரு பிராமணன் அக்பரால் மகமதியன் ஆனான். பல வகையிலும் முயன்று அதர்வ வேதத்தை பார்ஸி மொழியில் மொழி பெயர்த்தான். அதை சில மகமதியர்கள் அனுஷ்டானம் செய்தார்கள். எனவே வேதமே அறியாத நம் நவீன இந்துக்கள் அதர்வத்தையே அதமம் என்று கூறத் தொடங்கினர். மேலும் அதர்வ வேதம் மந்த்ரோச்சாடனைகள், பிரயோக ரகசியங்கள் நிரம்பியது. இதைக கண்டு மிரண்டும் இதை அதமம் என்று நம்மவர் கூறியிருக்கலாம் என்று கருதப்படுகிறது.

அதர்வ வேதத்தைப் பாக்களாலும், வசன நடையாலும் விளக்கியுள்ளனர். இவ்வேதத்தில் ஜலத்தாலும், நிலத்தாலும், காற்றாலும், கனவாலும், ககனத்தாலும் எப்படி நோய்கட்கு சிகிச்சை தரலாம் என்பதையும், மனோ சக்தியால் எவ்விதம் மனிதர்கள் முதல் விலங்குகள் வரை வசியம் செய்யலாம் என்றும், காம சூத்திரங்கள் பற்றியும் பல செய்திகள் காணப்படுகின்றன.

அதர்வண வேதத்தில் வரும் சில முக்கியமான ரிஷிகள் கண்வர், பாதராயணர் (வியாஸர்) விசுவாமித்திரர், கசியபர், கக்ஷிவான், புருனீதன், அகஸ்தியர், ஜமதக்னி, வாமதேவர் முதலியோர் ஆவர்.

திரு. பி. சுந்தரராமன் எம்.ஏ.பி.எட்.,
பழமார்னேரி.

அதர்வத்தை 20 காண்டங்களாகப் பிரித்து, 34 பிரபாடகங்களாக வகுத்து, அனுவாகங்கள், வர்க்கங்கள், ஸூக்தங்கள், மந்திரங்களாகப் பிரித்துள்ளனர். இவ்வேதத்தில் மொத்தம். 111 அனுவாகங்கள், 733 வர்க்கங்கள், 760 ஸூக்தங்கள் 5847 மந்திரங்கள் அடங்கியுள்ளன.

அதர்வத்தின் உபவேதம் அர்த்த சாஸ்திரம் எனப்படும் அர்த்த வேதமாகும். அதர்வத்திற்கு பிப்பலாதம் தௌதம், சௌனகீயம், ஜாஜலம், ஜல்தம், பிரும்மவாதம், தேவதர்சம், சாரண வைத்யம் என்ற சாகைகள் இருந்தன. தற்போது பிப்பலாதமும் சௌனகமும் மட்டுமே எஞ்சியுள்ளன. அதர்வத்திற்கு உரிய உபநிஷதங்கள் முண்டுகம், பிரச்னம், மாண்டூக்யம் என்பனவாகும்.

அதர்வ வேதத்தில் 1 முதல் 13 காண்டங்கள் வரை ஜுர மருந்துகள், இருமல் நீங்க மருந்து, அம்பு பாய்ந்தால் மருந்து, எலும்புகள் ஒன்று சேர மருந்து, நாய் கடி நீங்க மருந்து, ரோமம் வளர, உடல் சோபைக்கு மருந்து, புருஷ வசியம், ஸ்திரீ வசியம், பிரமசர்யம், பிரம ராட்சஸர்களை அடக்கும் வழி ஆகியவை விரிவாகக் கூறப்பட்டுள்ளது. மஞ்சள் காமாலைக்கு மின்னலை நாட வேண்டும், வாதமானால் சூரியனை நாட வேண்டும், முத்துக்கள் தீர்க்காயுளை அளிக்கும். தங்கம் வெகு நாள் வாழ வழிவகுத்து உடல் சோபையை அளிக்கும் என்பன போன்ற வாழ்க்கைக்குத் தேவையான அபூர்வ விஷயங்கள் இப்பகுதியில் காணப்படுகின்றன. 14வது காண்டத்தில் விவாஹ விஷயமும், 15வது காண்டத்தில் விராத்யன் என்பவன் சரிதையும், துறவியின் இலக்கணமும் 16, 17ம் காண்டங்களில் சத்ருஸம்ஹார மந்த்ர விஷயங்களும்,

# திருமலையில்

## தி. தி. தேவஸ்தான

# காட்டேஜ் கட்டண விவரங்கள்

| காட்டேஜ் விவரம் | கட்டணம் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|
| டி. பி. சி. | ரூ.25/- ரூ.15/- ரூ.10/- |
| டி. பி. சி. 3வது வரிசை (ஹீட்டர் இல்லாதது) | ரூ. 10/- |
| ஹில் வ்யூ டீலக்ஸ் காட்டேஜ் | ரூ. 20/- |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதி | |
| பெரியன | ரூ. 40/- |
| சிறியன | ரூ. 20/- |
| ஹில் வ்யூ காட்டேஜ் | ரூ. 10/- |
| சங்கு மிட்டா காட்டேஜ் | ரூ. 20/- |
| சேஷாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| அஞ்சனாத்ரி காட்டேஜ் | ரூ. 20/- |
| கருடாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| திருமணக் கூடம் (3வது சத்திரம்) | ரூ. 15/- |
| சிறப்பமைப்புகொண்ட காட்டேஜுகள் | ரூ. 75/- |
| டி. சி. சி. (உள்ளே உள்ள காட்டேஜுகள்) | ரூ. 50/- |

**எஸ். வி. விருந்தினர் விடுதி,**

| | |
|---|---|
| பெரிய அறைத்தொகுதிகள் | ரூ. 50/- |
| மூலை அறைத்தொகுதிகள் | ரூ. 40/- |
| சிறிய அறைத்தொகுதிகள் | ரூ. 35/- |
| எச். ஆர். ஜி. காட்டேஜுகள் | ரூ. 150/- |
| மோடிபவன் | ரூ. 100/- |

**திருமணக்கூடங்கள் (காட்டேஜுகள்)**

| | |
|---|---|
| பாலாஜி காட்டேஜ் | ரூ. 500/- |
| ரூயா காட்டேஜ் எண்: 248 | ரூ. 80/- |
| கோகினேனி காட்டேஜ் எண்: 226 | ரூ. 80/- |
| சி. சி. காட்டேஜ் எண்: 237 | ரூ. 100/- |
| எஸ். எம். சி. கிழக்கு எண் : 272 | ரூ. 50/- |
| ஏ. டி. சி. எண் : 99 | ரூ. 80/- |
| டி. பி. (உள் பக்க காட்டேஜ்) | ரூ. 50/- |
| டி. பி. வி. வி. சி. | ரூ. 50/- |
| டி. பி. காட்டேஜ் (தனிச் சிறப்புக் கொண்டது) | ரூ. 75/- |
| ஏ. டி. சி. மற்றும் டி. பி. சி. ஒரு அறைத் தொகுதி ஹீட்டர் உள்ளது | ரூ. 12/- |
| ஹீட்டர் இல்லாதது | ரூ. 10/- |

18ம் காண்டத்தில் அந்தியேஷ்டி அல்லது அபரகிரியைகள் பற்றியும், 19வது காண்டத்தில் அரசனுக்கு ஆசி, காம சூக்தம், கால சூக்தம் ஆகியவையும், 20வது காண்டத்தில் பொது விவரணங்களும் கூறப்பட்டு இருக்கின்றன. குந்தப ஸூக்தங்கள் என்னும் சில, அதர்வண வேத இறுதியில் உண்டு. இவை இந்திர வழிபாட்டைக் குறிப்பிடும்.

ஈரேழு பதினுன்கு உலகங்களும் ஒரு ராஜ்யம்; இந்த ராஜ்யத்திற்கு ஒரு சக்ரவர்த்தி ஆண்டவனே. அந்த சக்ரவர்த்திக்கு எல்லா ஜீவராசிகளும் பிரஜைகள். சக்ரவர்த்தியும் அனுதி, பிரஜைகளும் அனுதி. ராஜ்யமும், சக்ரவர்த்தியும், பிரஜைகளும் இருந்தால் அதற்கு ஒரு சட்டமும் வேண்டும். இவர்கள் அனுதியானுல் சட்டமும் அனுதி. இந்த அனுதியான சட்டமே வேதம். உலகம் உற்பத்தியாகிறது, வளர்கிறது, பிரளயம் அடைகிறது. திரும்பவும் உற்பத்தி, ப்ரளயம் இப்படியே சுற்றிக் கொண்டு இருக்கிறது.சக்ரவர்த்தியும் சட்டமும் ஸ்திரம். ஜீவன்களும் ஸ்திரமாயினும் ஜன்மமெடுத்துச் சுற்றுகிறுர்கள். ஒவ்வொரு ஸ்ருஷ்டியின் ஆரம்பத்திலும் அந்த சக்ரவர்த்தியான ஈச்வரன் சில அதிகாரிகளை சிருஷ்டிக்கிறுன். அவர்கள்தான் ரிஷிகள். அனுதியான சட்டமாகிய வேதம் ஆகாயத்தில் சப்த ரூபமாக நிறைந்திருக்கிறது. அதை கிரகிக்கும் யோக சக்தியை ரிஷிகளுக்கு ஈச்வரன் தருகிறுன். பஞ்ச பூதங்களில் உள்ள ஆகாசமும் பஞ்சேந்திரியங்களில் ஒன்றுன செவியில் உள்ள ஆகாசமும் ஒன்றுனுல் ஆகாயத்தில் உள்ள சப்தங்களை யோகிகளால் கிரகிக்க முடியும். 'சுரோத்ர ஆகாசயோர் ஸம்பந்த ஸம்யமாத் திவ்யம் சுரோத்ரம்' என்று இதையே யோகஸூத்ரம் கூறுகிறது. அவ்விதம் ரிஷிகளால் கிரகிக்கப்பட்ட சப்தங்களே வேத மந்திரங்களாகும்.

மானிடக் குழவிகளான நம்மை என்றும் இளைக்காத வண்ணம் சாகவதமாக ஞானப்பாலை குன்றுது தரும் வேதங்கள் என்னும் பசுக்கள் அதனுடைய சிக்ஷா, வ்யாகரணம், சந்தஸ், ஜ்யோதிஷம், நிருக்தம், கல்பம் எனும் ஆறு அங்கங்களாகிய கன்றுகளுடன் நிறைவாழ்வு வாழ வழி செய்வோமாகுக! ★

# குறுக்கெழுத்துப் புதிர்



திரு. எஸ். சம்பத்
மயிலாடுதுறை





## குறிப்புகள்

### இடமிருந்து வலம்

1. ஆண்டாள் இயற்றியது.
2. பாண்டவர்கள் 12 வருடம் இதில் கழித்தார்கள்
3. தொண்டு செய்வதை இப்படிக் கூறலாம்
4. திருக்குறளை இயற்றியவர்
6. நாலாயிரத் திவ்யபிரபந்தத்தில் மூன்றுவது ஆயிரத்தை இப்படிக் கூறுவர்.
11. திருமாலின் கரத்தில் பாஞ்சஜன்யம் எனும் இது இருக்கிறது.
12. சிவன் கோவில்களில்———இருக்கும்
14. சைவ அடியார்களை இப்படி அழைப்பர்
19. இராவணனின் சிறையில் சீதையுடன் இவள் இருந்தாள்
20. வாரத்தின் 6 வது நாள்
21. ஆழ்வார்கள் பாடிய திருமால் திருப்பதிகளை இப்படிக் கூறுவர்
23. திருவெம்பாவை———என்று முடியும்
24. அழித்தல் தொழில் செய்ய இறைவன் எடுக்கும் அவதாரம்
26. திருவள்ளுவரின் மனைவி பெயர்
28. ப்ராணயாமம் செய்வதன் மூலம் இதைச் சேமித்து வைக்கலாம் (அல்லது) தேகவாயு
29. திருமால் எடுக்கபோகும் அவதாரம்
30. ———யோடு இறைவனை வணங்கவேண்டும்
31. இரண்டு எழுத்துள்ள எண்
32. வைணவர்கள் இதை நெற்றியில் இட்டு கொள் [வார்கள்.
33. சிவனின் மனைவி

### மேலிருந்து கீழ்

1. சிராத்தத்திற்கு இது அவசியம்
5. வேதங்களில் பழமையானது
7. சிவன் உமைப்பிராட்டியை———யாக கொண்டவர்.
8. நாதஸ்வரம் ஓர்———வாத்யம்
9. கரகம் என்பது ஒரு கிராமியக்———
10. அருணகிரிநாதர்———உருவாக இருக்க கந்தரனுபூதி பாடினர்
11. திருமாங்கல்யத்தை இதில் கோர்த்து அணிவர்
12. உதவியை பெற்றுக்கொண்டு———சொல்ல வேண்டும்
13. பெரியாழ்வார்———வின் திரு அவதாரம்
15. காட்டில் சீதை இராமனிடம்———கேட்டதால் இராமாயணம் வந்தது
16. திருமலை, திருப்பதி———
17. இரணியனை வதம் செய்ய திருமால் எடுத்த அவதாரம்
18. ———ல் மேல் பூனை
20. சங்ரதாஸ் நாடக———
22. மாதங்களில் இது முக்கியம்
23. இது சாரைசாரையாகத் தரையில் செல்லும்
25. எல்லோரிடத்திலும்———வேண்டும்
27. முன்செய்த———யால் துன்பம் வருகிறது.

(விடைகள் 20ம் பக்கம் பார்க்க)

# திருவேங்கடமலை வரலாற்று மாலை

8

**இராமாநுசர் ஏற்படுத்திய ஒழுக்க விதிகள் :**

பின்பு இவ்வாறு சாஸ்திரத்தில் கூறப்பட்ட திருவேங்கடமலையின் வைபவச் சிறப்பை நன்குணர்ந்த இராமாநுசமுனிவர் தம்முடைய ஸ்ரீ ராமாயணாசாரியரான திருமலை நம்பிகளும் சிஷ்யரான திருமலையனந்தாழ்வானும் திருவேங்கடநாதனது பெருமையை நன்கறிந்து அபசாரம் ஏதுமின்றி அப்பெருமானுக்குத் திருமுகம் மலரும்படிக் கைங்கரியம் செய்து வருவதைக் கண்டு மகிழ்ந்தும், பெரும்பாலும் மற்ற அனைவரும் அபசாரத்தில் ஊன்றியிருப்பதைப் பார்த்து மிகவருத்தமுற்று நன்னெறியோடு முரண்பட்ட அவர்களது செய்கையினாலுண்டாகும் அபசாரம் உண்டாகாதபடிச் சில நியமங்களை (ஒழுக்க விதிகளை) ஏற்படுத்த வேணுமென்று கருதி, திருமலைநம்பிகளையும் திருமலையனந்தாழ்வானையும் அழைத்து வாரீர் ஆரியர்களே இத்திருமலையில் இதன் பெருமையை அறியாத மக்கள் தம்மனம் போனபடி நடப்பதனால் உண்டாகும் அபசாரம் நேராமலிருப்பதற்காகச் சில நியமங்களை ஏற்படுத்த விரும்புகிறேன். அவற்றைத் தேவரீர்கள் இருவரும் இங்கு அவசியமாக நடத்தி வைக்க வேண்டுமென்றும் வேண்டுகிறேன்.

'தொண்டு செய்வதில் பற்றுடையவர்கள் சிலரும் பிரம்மத்தினிடம் ஊன்றித் தியானம்செய்வோர் சிலரும் தவம் புரிவோர் சிலரும் ஆராமம் அமைப்போர் சிலரும் பெருமான் திருமேனியழகைச் சேவிப்போர் சிலருமாக முனிவர்பெருமக்கள் அத்திருமலையில் இருந்தனர். சிலர் திருமலையில் இருந்துகொண்டே தினமும் பகவானை வணங்குகின்றனர் சிலர் அதன் சுற்றுப் புறங்களிலேயே எப்போதும் வசிக்கின்றனர். மற்றும் சிலர் வந்து பெருமானைச் சேவித்துவிட்டு மறுபடியும் வருகிறோமென்று விடைபெற்றுச்செல்கின்றனர். பூஜிக்கத்தக்கவரும் மஹாபாக்கியசாலியுமாகிய அகத்திய மகாமுனிவர் தமது சீடர்களுடன் அத்திருமலையில் வாசம் செய்துகொண்டு உயர்ந்த நந்தவனமொன்றை நிருமித்துப் பலவகை மலர்களாலே திருவேங்கடமுடையானை அர்ச்சித்துக்கொண்டு வெகு நாட்கள் ஆனந்தாமுதத்தைப் பருகினர்' என்று வராகபுராணம் முதற்பகுதி 53 எண்ணிட்ட இருபத்தோராவது அத்தியாயத்திலுள்ள வசனங்களால்-பெருமாள்பக்கத்தில் இருந்து செய்யத்தக்கவைகளும் தொலைவில் இருந்துகொண்டு செய்யமுடியாதவைகளுமான பெருமான் திருமுக மலர்த்திக்கு உறுப்பான கைங்கர்யங்களைச் செய்யும் சிலர் மட்டுமே திருமலைமேல் இருந்ததாக அறியப்படுவதனால், மற்றவர்கள்-மலையின் கீழ் இருந்துகொண்டும் செய்யத்தக்க பகவத்குணாநுபவம் முதலிய செயல்களில் ஈடுபட்டவர்கள் மலையின் கீழேயே இருக்கவேண்டும். திருவிழாக் காலங்களில் மட்டுமே அவர்கள் மலைமீது செல்லக்கடவர்கள். மற்றபோது செல்லக்கூடாது என்று நியமம் ஏற்படுத்தவேண்டும்.

இங்ஙனமே 'அத்திருமலையில் உண்டான காய் கனி கிழங்கு முதலியவற்றை, அர்ஜுநா யாரும் தம் விருப்பப்படி உண்ணக்கூடாது. அம்மலை வைகுந்தநாட்டு மலையல்லவா' என்று ஸ்காந்த புராண ஸ்வர்ணமுகரீ மாகாத்மியத்திலுள்ள பாரத்துவாச முனிவரின் வசனத்தினால், அப்ராக்ருதமான வேங்கடமலையில் உண்டாகிப் பெருமாளுக்கு நிவேதனம் செய்யத் தக்கதாகச் சாஸ்திரங்களில் அறியப்பட்ட காய் கனி கிழங்கு முதலிய பொருளனைத்தும் திருவேங்கடவனுக்கு நிவேதனம் செய்யாமல் புசிக்கக்கூடாதென்று அறிவிக்கப்பட்டமையாலும், 'உண்ணத்தக்க கந்தமூல பலாதிகளையும் அன்னங்களையும் பெருமாளுக்கு முன்பு வைத்து நிவேதனம் செய்து அவர்பிரசாதத்தை உண்கின்றனர்' என்று அவ்விடத்திலேயே மறுபடியும் கூறியிருப்பதனாலும் கோவில்களுக்கு உபயோகிக்கத் தக்கவையாக விஷ்ணுவாகமங்களில் விதிக்கப்பட்ட எல்லாப் பொருள்களையும் திருமலையில் நித்யவாசம் செய்பவரும் யாத்திரிகராய் வருபவரும் பெருமாள் கோவிலிலேயே சமையல் செய்வித்துத் திருவேங்கடநாதனுக்கு நிவேதனம் செய்வித்து, அந்தப் பிரசாதத்தையே தமது வீட்டிலுள்ள மூர்த்திகளுக்கு நிவேதனம் செய்து அதைக் கொண்டே அவ்வக் காலத்துக்குத் தக்க ச்ராத்தங்களில் (திதிகளில்) தேவ பித்ருக்களுக்கு நிவேதித்துத் தாமும் உண்ணக்கடவர்கள் என்றும் நியமம் ஏற்படுத்த வேண்டும்.

---

திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்,
சிரோமணி—வித்வான், திருப்பதி.

---

(ஸ்ரீமத் அனந்தார்யர் அருளிய ஸ்ரீ வேங்கடாசல-இதிஹாஸ மாலாவின் தமிழ் மொழிபெயர்ப்பு)

இப்படியே 'மகரிஷிகள் அத்திரு மலையில் எம்பெருமானுக்குச் சாத்திய சந்தனம் புஷ்பம் நிவேதித்த அன்னம் முதலியவற்றைக் கொண்டு ஆசிரமங்களில் தாம் பூஜிக்கும் மூர்த்திகளுக்கு ஆராதனம் செய்து கொண்டு வாழ்ந்தனர்' என்று பிரம்மோத்தரகண்டம் ஏழாமத்தியாயத்திலுள்ள வசனத்தின் மூலம், வீட்டில் அர்ச்சிக்கும் மூர்த்திகளுக்கு, திருவேங்கடநாதனது பிரசாதமான சந்தன புஷ்பாதிகளாலேயே பூஜை நடந்ததாக அறியப்படுவதனால் மக்கள திருவேங்கடமுடையானுடைய தோட்டங்களில் வீடுகளிலுள்ள அர்ச்சாமூர்த்திகளுக்கென்று தனிப்படப் புஷ்பம் முதலியவற்றைப் பறிக்காமல், திருவேங்கடமுடையானுக்காகவே அவற்றைப் பறித்து வந்து அவனுக்கு ஸமர்ப்பித்து அவற்றையே கொண்டு வந்து தமது வீட்டில் பெருமாளுக்கும் சாத்தித் தாமும் உபயோகிக்கக்கடவர்கள் என்ற நியமமும் ஏற்படுத்த வேண்டும்.

இதை உதாரணமாகக்கொண்டு, திருமலையில் வசிப்பவர்கள் தாமுண்ண விரும்பி இனிமையாகச் சமைக்கும் க்ஷீராந்நம் (பாற்சோறு) பாயஸம் பருப்பு அப்பம் முதலியவற்றையும் தத்தம் இல்லங்களில் சமைக்காமல் கோவிலிலேயே சமைப்பித்துத் திருவேங்கடவனுக்கு அமுது செய்வித்தே அவற்றைத் தாம் உண்ணக்கடவர்களென்றும், 'கலியுகத்தில் பிராணிகள் எல்லோரும் உணவுகொண்டே உயிர் தரிப்பவர்களல்லவா' என்று கூறியுள்ளபடி கலியில் மக்களனைவரும் அன்னத்தினாலேயே பிராணனைத் தரிக்கவேண்டியிருப்பதனாலும் கோவிலில் நாம் விரும்பும் போதெல்லாம் உணவு கிடைத்தல் அரிதாகையாலும் பசியைக் கட்டாயமாக தீர்க்க வேண்டியிருக்கையாலும் கோவிலுக்கு உபயோகப்படாத கறி காய் முதலியவற்றையும் அன்னத்தையும் தத்தம் வீடுகளில் சமைத்து உண்ணக் கடவர்களென்றும் நியமம் ஏற்படுத்த வேண்டும்.

இவ்விதமே, திருமலையில் வாசம் செய்பவர்களுக்கு மரணம் நேரிடும் போது அவர்களை மரணமடைவதற்கு முன்பாகவே மலையிலிருந்து இறக்கிக் கொண்டு வரவேண்டுமென்றும், எதிர்பாராமல் திடீரென்று மரணம் நேர்ந்து விடுமானால் அவ்வுடலைக் கீழுக்கு இறக்கிக்கொண்டு வந்தே ஸம்ஸ்காரம் (எரித்தல் அல்லது புதைத்தல்) செய்யவேண்டுமென்றும் நியதி ஏற்படுத்தவேண்டும்.

இவ்வாறே 'பரமாத்மாவாகிய திருமால் மான் முதலிய விலங்கு கிளி முதலான பறவை இவற்றின் உருவந் தரித்து நித்திய சூரிகளோடும் திருமகளோடும் கூடி அத்திருமலையில் விளையாடுகிறார்' என்று வராகபுராணம் முதற்பகுதி 44 எண்ணிட்ட பன்னிரண்டாமத்தியாயத்து வசனத்தினாலும், 'தேவர்கள் அத்திருமலையில் மான் பறவை குதிரை இவற்றைக் கண்டு பகவானாகவே எண்ணி மனத்தில் வியப்பு உண்டாகப்பெற்று அவற்றை நன்றாகக் காணவேண்டுமென்று விரும்பிப் பின் தொடர்ந்தனர்' என்று அதிலேயே உள்ள வேறு வசனத்தினாலும் திருவேங்கடமலையில் சஞ்சரிக்கும் விலங்கு பறவை முதலியவைகளைப் பகவானாக ஊகிக்க இடமுள்ளமை அறியப்படுவதனால் தமோ குணம் மிக்க மக்கள் (ஊனுக்காக) அவற்றைக் கொல்லலாகாதென்றும் நியதி ஏற்படுத்த வேண்டும்.

இவ்விதமாகவே வராகபுராணம் முதற்பகுதி 51 எண்ணிட்ட பத்தொன்பதாமத்தியாயத்தில், 'இத்திருநாளைக் குறித்து என்னைச் சேவிப்பதற்காக யாவனொருவன் தன்னிருப்பிடத்திலிருந்து திருமலைக்குச் செல்ல ஓரடியேனும் எடுத்து வைக்கிறானோ அவ்வோரடியின் பயனாக அவனுக்கு என் பாதமடைதலாகிய வீடு பேறு கிட்டும். முனிவர் பெருமக்களே திருவேங்கடயாத்திரை செய்யும் போது மனிதன் எடுத்து வைத்த ஒவ்வோரடியும் பிரமஹத்தியை முதலியவற்றினால் நேரும் பாவங்களைப்போக்கிப் பிறவிக்கடலைத் தாண்டுவிக்க வல்லது. இம்மைப் பயன்களும் அவனுக்குத் தானே கிடைக்கும்' என்றுள்ள பகவானது வசனங்களினாலும், வாமன புராணம் 43 என் குறித்த இருபத்துநான்காமத்தியாயத்திலுள்ள 'வாமதேவரே திருவேங்கடமுடையானுடைய திருவிழாக்களில் நாராயணகிரிக்கு (திருமலைக்கு) எந்தப் புண்ணியவான்கள் செல்லுகின்றார்களோ அவர்களுக்கு உண்டாகும் பயனையும் கேட்பீராக, முனிவரே அந்தணரும் மற்றவருமாகிய மக்கள் நாராயணகிரியைக் குறித்துச் செல்வதாகக் குறுகக் குறுகவாகிலும் கால்களை வைத்து நடக்கும் அடிகளுக்கு நேரும் பலனையும் கேட்பீராக. தமது வீட்டிலிருந்து திருவேங்கடமலைவரை எத்தனையடிகள் உள்ளனவோ அவற்றில் ஒவ்வோரடிக்கும் ஒவ்வொரு யாகம் செய்த பயன் இவ்வுலக மக்களுக்கு உண்டாகும்' என்று பிரமதேவன் கூறிய வசனத்தினாலும், பிரமஹத்தியை முதலியவற்றாலுண்டாகும் பாவம் நசித்தல் பிறவித்துயர் நீங்கி மோக்ஷமுண்டாதல் முதலிய பயன்களுக்கு உபாயமாகச் சொல்லப்பட்ட திருவேங்கடமலை யாத்திரையிலேயே உடலைக் காக்க ஏற்பட்ட வாகன மேறுதல் முதலியவை உசிதங்களல்லவென்று அறியப்படுவதனால், திருமலையில் நேராகக் காலை வைத்து ஏறிச் செல்லும் ஸமயத்திலும், பெருமான் திருவிழாவில் திருமலையில் திக்குப் பலி ஸாதிக்கும் வீதிகளில் செல்லும் ஸமயத்திலும் மனிதர்கள் செருப்பு அணிதலும் வாகனமேறிச் செல்லுதலும் கூடாதென்றும் நியதி கற்பிக்க வேண்டும்.

'சண்டாளர் துலுக்கர் தத்தம் சாதி நிலைகளுக்குரிய அறங்களினின்றும் நழுவியர் மற்ற பாவிகள் ஆகிய மனிதர்களாலே ஏற முடியாதல்லவா இவ்வுயர்ந்த திருவைகுந்தமலை' என்னும் வராக புராண வசனத்தாலும், 'சண்டாளர் துலுக்கர் முதலியவர்களாலும் வேதத்தை இசையாத நாத்திகர்களாலும் இவ்வுயர்ந்த புனித

மான திருமலை ஏறமுடியாததாகும்' என்ற வாமன புராணம் 21 எண்ணிட்ட இரண்டாமத்தியாய வசனத்தாலும் சண்டாளர் முதலிய தாழ்ந்தவர்களுக்கு மலையேறும் தகுதி இல்லையென்று அறியப்படுவதனால் அத்தகையோர் இம்மலையின் கண் ஏறக்கூடாதென்றும் நியமம் விதிக்க வேண்டும்.

இத்தகைய சிறந்த ஆசாரநியமம் திருவேங்கடமலையில் எவ்வளவான பகுதியில் நடைபெறவேண்டுமென்றால், 'இங்ஙனம் திருமாலால் வினவப்பட்ட சிவபெருமான், ஐயனே திருவேங்கடநாதனே நீர் எங்கு நித்யவாஸம் செய்வீரோ அங்கேயே நானும் நித்யவாஸம் செய்யவேண்டுமென்று பதிலளிக்க, அதற்குக் கார்மேகம் போன்ற காந்தி கொண்ட பகவான் மகாதேவா பார்வதிபதியே வல்லவனே வேங்கடமென்னும் இம்மலையில் இக்கற்பம் முடியும்வரை வசிக்கப்போகிறேன். ஈசுவரனே நீயும் இம்மலைத் தாழ்வரையில் தென்கிழக்குத் திசையில் நித்யமாக வசிக்கக்கடவாய்' என்று கூறினரென்று வராகபுரணம் முதற்பகுதி 49 எண்ணிட்ட பதினேழாமத்தியாயத்திலுள்ள வசனத்தினால், திருவேங்கடமலையில் தோன்றிய ஸ்ரீநிவாஸப்பெருமானைச் சேவிக்கவந்த பிரமன் சிவன் முதலியோரை விடைகொடுத்தனுப்பும் ஸமயத்தில் ருத்திரன் நீர் வசிக்குமிடத்தில் நான் வசிக்குமாறு அருள் புரியவேண்டுமென்று கேட்டதற்கு, திருவேங்கடமலைத் தாழ்வரையில் தென்கிழக்கே ஒரு யோஜனை தூரத்தில் நித்தியமாக வசிப்பாயென்று ஆணையிட்ட பகவானால், அப்ராக்ருதமான திருவேங்கடமலையில் ஸ்வாமி புஷ்கரிணி முதலாகக் கபிலதீர்த்தத்தின் கீழ்க்கரை வரையாக உள்ள பகவானுடைய ஸந்நிதியாகிய பகுதியில் வேறு தேவதைகள் வசிக்கலாகாதென்பது குறிப்பாக அறிவிக்கப்பட்டு விட்டபடியினாலும், 'பிரம்மாண்டத்தில் திருவேங்கடமலையோடு ஒத்த இடம் வேறொன்றுமில்லை; செல்வம் நிறைந்த இச்சேஷகிரியானது புனிதங்களில் புனிதமானது' என்று திருவேங்கடமலை முழுவதுமே எல்லாத் தலங்களைவிட உயர்ந்ததாகவும் புண்ணியமானதாகவும் எங்கும் பிரசித்தமாயிருந்த போதிலும், 'முனிவர் பெருமக்கள் ஸ்வாமிபுஷ்கரிணிக் கரையின் புண்ணியமான நான்கு பக்கங்களிலும ஒரு யோஜனை தூரமுள்ள இடங்களில் மனமகிழ்ச்சியுடன் திருவேங்கடவன் திருவருளை விரும்பி உயர்ந்த தவத்தை மேற்கொண்டு வசித்தனர்' என்னும் வசனத்தால் சில பரமரிஷிகள் ஸ்வாமி புஷ்கரிணிக்கு நான்கு திசைகளிலும் ஒரு யோஜனை தூரமுள்ள பகுதியானது மிகமிகப் பாவனமாய்ப் பகவான் மிகவும் விரும்பித் தங்கியிருக்கப் பெற்றதென்று நிச்சயித்து அவ்விடத்தில் தவமியற்றிக்கொண்டு நித்யவாஸம் செய்ததாக ஸுவர்ணமுகரீமாகாத்மியங்கூறும் பகுதியில் அறிவிக்கப்பட்டுள்ளதனாலும் ஸ்வாமி புஷ்கரிணி முதலாகச் சுற்றும் ஒரு யோஜனை தூரத்தளவான பகுதியில் இத்திருமலையில் முற்கூறிய சிறந்த நியமம் நிலைபெறுத்தத் தக்கதென்று அறியப்படுகிறது.

இப்படிப் பரமபாவநமான திருவேங்கடமலையைத் திருவேங்கடமுடையானுடைய திருக்கோவிலாகவே கௌரவித்து இத்தலத்தில் வசிப்பவர்களும் யாத்திரையாக வரும் மற்றவர்களும் அவசியமாக ஆசரிக்க வேண்டியவையென்று அடியேன் நிச்சயித்த இந்த நியமங்களை அடியேனோடு கருத்து ஒருமித்து நிறைவேற்றி வைக்கத் திருவேங்கடமுடையான் ஸங்கல்பம் செய்துகொள்ளவேணும். இத்தகைய நியமங்கள் கடைப்பிடிக்கப்பட்டால் பெரும்பாலும் மக்கள் அபசாரப்பட இடமிராதென்று நினைக்கிறேனென்று (இராமானுச முனிவர்) கூறினர்.

(தொடரும்)

**17 ம் பக்கத்து விடைகள்**

**இடமிருந்து வலம்**

1. திருப்பாவை
2. கானகம்
3. பணி
4. திருவள்ளுவர்
6. இமயமா
11. சங்கு
12. நந்தி
14. நாயன்மார்
19. திரிசடை
20. சனி
21. திவ்யதேசம்
23. எம்பாவாய்
24. ருத்திரன்
26. வாசுகி
28. ப்ராணன்
29. கல்கி
30. பக்தி
31. ஆறு
32. திருமண்
33. பார்வதி

**மேலிருந்து கீழ்**

1. திதி
5. ருக்வேதம்
7. பாதி
8. மங்களா
9. கலை
10. கிளி
11. சரடு
12. நன்றி
13. கருடன்
15. மான்
16. தேவஸ்தானம்
17. நரசிம்மன்
18. மதி
20. சபா
22. தேதி
23. எறும்பு
25. பற்று
27. வினா

# கலித்தொகையில் பாரதக் கதை

நாம் பாரத நாட்டு மக்கள் என்று பெருமைப்படுவதற்குப் பல காரணங்கள் உள்ளன. உமையொரு பாகர் உவந்து அமர்ந்த பனிமலை கயிலாயம் இங்கேதான் இருக்கிறது. கீதை உரைத்து நம் வாழ்விற்கு நல் பாதை காட்டிய கண்ணன் வாழ்ந்ததும் இந்த நாட்டில்தான். நான்முகக் கடவுள் வேள்விகள் முடித்துப் புண்ணியம் தேடப் புனலாடியதும் கங்கை நதியில்தான். வேண்டிய வரங்களை வழங்கும் வேங்கடக்கடவுளும், அறம் வளர்க்கும் திருவரங்கப் பெருமானும் இருப்பதுவும் எங்கள் நாட்டில்தான்.

இந்தப் பெருமைகளெல்லாம் வழி வழியாக இந்தியனுக்கே சொந்தம். எனவேதான் பாரதிக்கவிஞன் பெருமை பொங்கப் பாடினான்,

பாரத நாடு பழம்பெரும் நாடு
நீரதன் புதல்வர்; இந்நினைவு
அகற்றாதீர் !

என்று.

வேதங்களும் உபநிடதங்களும், நமது முன்னோர் வாழ்வின் சிறப்பை வாரி வழங்கும் கலைப்பெட்டகங்கள். பொய் வழிகளை நீக்கி உய்வழிகளை காட்டி மக்களை நல்வழிப்படுத்தும் கலங்கரை விளக்கங்கள்; மனத்துக்கண் தோன்றும் மாசுகளை ஒழித்து உயர் குணத்துடன் வாழ்வதற்குக் கிடைத்த ஒப்பற்ற மருந்துகள்.

தத்துவங்களும் நீதிமொழிகளுமே வேத உபநிடதங்களின் அமைப்பாக உள்ளன. இதனால் பாமரமக்களின் நாட்டம் இவைகளின் மீது செல்லவில்லை. படிப்பறிவுமிக்கவர்கள் மட்டுமே வேத உபநிடதங்களைப் போற்றும் நிலை ஏற்பட்டது. காரணம், வெறும் அறிவுரைகளை மட்டுமே ஏற்கும் மனப்பக்குவம் எல்லா மக்களிடத்தும் இல்லாததுதான்.

கசப்பு மருந்துதான் உடல்நோயை நீக்கும். என்றாலும், நோயாளி அந்த மருந்தை உண்ணுவதற்குச் சங்கடப்படுகிறான். அதனால் மருத்துவர் கசப்பு மருந்தைத் தேனில் குழைத்துச் சாப்பிட வைத்து அவனுடைய நோயை நீக்குகிறார். அது போல நல்வாழ்வுக்கு வழிகாட்டும் நீதிநெறிகளை மக்கள் மனதில் பதிய வைக்க வேண்டுமானால், அறவழியில் நடந்து நலம் பெற்ற சான்றோர்களின் வாழ்க்கையை எடுத்துக் காட்ட வேண்டும். அதைச் சுவைபடக் கதை போலச் சொல்லும் போது, மனிதமனம் தன் நினைவில் அதை ஆழமாகப் பதிவு செய்து கொள்ளுகிறது.

புலவர் பெ. கிருஷ்ண ராஜன், எம்.ஏ.,
சேலம்–6.

'உண்மையே பேசு, உண்மை உயர்வு தரும்' என்பது ஒரு நல்ல நீதி. இதை ஒருவர் நாள்தோறும் தெருவுக்குத்தெரு நின்று பிரச்சாரம் செய்வதாக வைத்துக்கொள்ளுவோம். எத்தனைபேர் கேட்பதற்குக் கூடுவார்கள்? முதல் நாள் ஐம்பது பேர் கேட்டால், இரண்டாம் நாள் முப்பதாகக் குறைந்து, மூன்றும் நாள் ஐந்து அல்லது நான்கு பேராக சுருங்கிக் கடைசியில் "இவருக்கென்ன வேலை?" என்று மக்கள் ஏளனம் செய்யத் தொடங்கி விடுவார்கள்.

ஆனால், உண்மை பேசி உயர்வு பெற்ற அரிச்சந்திரன் கதையை அவர் பிரச்சாரம் செய்யும் போது அதைக் கேட்பதற்கு ஏராளமானவர்கள் கூடுகிறார்கள். கதையைக் கேட்டபிறகு "ஆகா! உண்மை பேசிய அரிச்சந்திரன் இறுதியில் நன்மை அடைந்தான். எனவே அவனைப் போல நாமும் உண்மையே பேசவேண்டும்" என்ற எண்ணம் அந்தக் கதையைக் கேட்டவர்களின் மனத்தில் நிலைத்து விடுகிறது.

வெறும் நீதிபோதனைக்கும், அதைக் கதையோடு குழைத்துச் சொல்வதற்கும் உள்ள வேறுபாடு இதுதான். இதை உணர்ந்த பிறகு, நம் முன்னோர்கள் நம் மக்களின் உள்ளங்களில் நல்ல கருத்துக்களைப் பதியவைப்பதற்கு இதிகாசங்களையும் புராணங்களையும் இயற்றினார்கள்.

பாரத நாட்டின் புராதன இதிகாசங்கள் இரண்டு. மக்களுக்குச் சிறந்த நீதிகளை எடுத்துக் கூறுவதற்காகவே இவை தோன்றின.

'பிறனில் விழையாமை' என்னும் உயர்ந்த நெறியை உணர்த்துவது இராமாயணம். மாற்றான் மனைவியை மனத்தால் நினைப்பதும் தவறு; அப்படி நினைத்தால், நினைத்தவன் மட்டுமல்ல, அவனுடைய குலம் முழுவதுமே அழியும் - என்னும் கருத்தை அழகிய கதை வழியாகக் காட்டினார் வால்மீகி முனிவர்.

'அழுக்காறு அழிவைத்தரும்' என்னும் நீதியை நிலைநாட்டுவது மகாபாரதம். உடன் பிறந்த சகோதரர்களின் உயர்வைக் கண்டு பொறாமைப் பட்டு அவர்களை அழிக்க நினைப்பது தவறு; அப்படி நினைத்தால், அவனுக்குத் துணைபோனவர்களும் சேர்ந்து அழிவார்கள் என்னும் அறிவுரையைச் சிறந்த கதை வழியாகக் கூறினார் வியாச முனிவர்.

இவ்வாறு கதைகளின் வழியாகச் சொல்லப்பட்டதால், இந்த இரண்டு நீதிகளும் மக்கள் உள்ளங்களில் நிலை பெற்றன; இராமாயணம், மகாபாரதம் ஆகிய கதைகள் உலகம் முழுவதும் பரவி, மக்களால் இன்றும் விரும்

பப்படுகின்றன. வடமொழியில் தோன்றிய இந்தக் கதை நிகழ்ச்சிகள் பிறமொழி நூல்களிலும் இடம்பெற லாயின.

இறைவன் அனுப்பிய குறுமுனி யாம் அகத்தியன் பொதியமலை வந்து வழங்கிய மொழி தெய்வத்தமிழ் என்று போற்றப்படுகிறது. கண்ணுதற் கடவுள் கழகமோடு அமர்ந்து பண்ணுறத் தெரிந்து ஆய்ந்தது இப் பசுந்தமிழ். புலவர் பெருமக்கள் ஒருங்கு கூடி வளர்த்த இச்சங்கத் தமிழ் இலக்கியங்களில் இராமாயணம், மகாபாரதக் கதை நிகழ்ச்சிகள் ஏராளமாக இடம் பெற்றுள் ளன. பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இக்கதைகள் மக்கள் மனதில் இடம் பெற்றுச் சங்க இலக்கியங்களிலும் தக்க இடங்களில் எடுத்துச் சொல்லப்பட்டுள்ளது.

சங்கத் தமிழ் இலக்கியங்களில் 'கலித் தொகை' நூல் குறிப்பிடத் தக்கதாகும். "கற்றறிந்தோர் ஏத்தும் கலி" என்று இந்நூல் பாராட்டப்படுகிறது. அழகிய இயற்கை நிகழ்ச்சிகள் இந்நூலில் சுவைபடச் சொல்லப்பட்டுள்ளன. பாடல் நிகழ்ச்சிகளை விளக்க, இந்நூலில் பாரதக்கதை நிகழ்ச்சிகள்பல காணப் படுகின்றன.

கலித்தொகையில் முதற்பகுதியாக அமைந்திருப்பது பாலைக் கலி. தலைவன் ஒருவன் ஒரு காரணமாகத் தலைவியைப் பிரிந்து செல்ல வேண்டி இருக்கிறது. அவனது பிரிவைத் தலைவி பொறுக்க மாட்டாள் என் பதை உணர்கிறாள் தோழி. எனவே 'பிரிந்து செல்ல வேண்டாம்' என்று தலைவனிடம் கூற நினைக்கிறாள். என்ன சொல்லித் தடுப்பது? நினைத்துப்பார்க்கிறது தோழியின் மனம்.

தலைவன் செல்லும் வழி காட்டு வழி அல்லவா? யானைகள் அங்குக் கூட்டமாக இருக்கும். மூங்கில்புதர்கள் நெருங்கி இருக்கும். உயரமாக வளர்ந்து முற்றிய மூங்கில்கள் ஒன்றோடு ஒன்று உராய்ந்து நெருப்புப் பற்றி எரியும். புகை விட்டு எரியும் நெருப்பு வளையத்தினுள்ளே யானைக் கூட்டம் அகப்பட்டுக்கொள்ளுகிறது. நெருப்பைக் கண்டால் யானைகளுக்குப் பயம். ஆனால் அந்தக் கூட்டத்தில் ஒரு யானை மட்டும் சிறிதும் பயப் படவே இல்லை. தன்னுடன் இருந்த கூட்டத்தை அழைத்துக் கொண்டு புதர்களை 'அழித்துத் தானும் தப்பி தன் இனத்தையும் உயிர் பிழைக்க வைக்கிறது. இப்படிப்பட்ட கொடிய காட்டுவழி அல்லவா நீங்கள் செல்லும் வழி— என்று தலைவனிடம் சொல்லி அவனது பயணத்தைத் தடுக்கிறாள் தோழி.

இதைச் சொல்லுகிற தோழி, பாரதக் கதையில் வரும் அரக்கு மாளிகை நிகழ்ச்சியை உவமையாகக் காட்டுகிறாள்.

சூரிய மண்டிலத்திற்கு வடமொழியில் 'பகன்' என்று ஒரு பெயருண்டு. அந்தப் பகன் கண்ணில்லாதவன். அவனைப் போலவே கண்ணில்லாத முகத்தை உடையவன் திருதராட்டிரன். இவனுடைய மூத்த மகன் துரியோதனன். இவன், வாரணாவதத்தில் பஞ்ச பாண்டவர்கள் வாழ்ந்த அரக்கு மாளிகைக்கு நெருப்பு வைத்தான்.

பற்றி எரியும் அரக்கு மாளிகைக் குள்ளே பாண்டவர் ஐவரும் அகப்பட்டுக் கொண்டதுபோல, மூங்கில்கள் பற்றி எரியும் நெருப்புக்குள்ளே யானைக்கூட்டம் அகப்பட்டுக் கொண்டது. பாண்டவர்களில் ஒருவனான வீமன் தன் உடன் பிறந்தார்களை அழைத்துக் கொண்டு நெருப்பு மாளிகையிலிருந்து தப்பியது போல, பலம் மிக்க யானை ஒன்று நெருப்புப் புதரிலிருந்து தன் கூட்டத்தை அழைத்துச்சென்று காப்பாற்றியது — என்று பாரதக் கதை நிகழ்ச்சி மிகப் பொருத்தமாக எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

பாலைக்கலியில் 25-ஆம் பாடலில் இந்தச் செய்தி காணப்படுகிறது. இதோ பாடல் வரிகள்.

வயக்குறு மண்டிலம் வடமொழிப்
பெயர்பெற்ற
முகத்தவன் மக்களுள் முதியவன்
புணர்ப்பினால்
ஐவரென்று உலகேத்தும் அரசர்கள்
அகத்தரா
கைபுனை அரக்கில்லை கதழ்எரி
சூழ்ந்தாங்கு
களிதிகழ் கடாஅத்த கடுங்களிறு
அகத்தவா
முளிகழை உயர்மலை முற்றிய
முழங்கழல்
ஒள்ளுரு அரக்கில்லை வளிமகன்
உடைத்துத் தன்
உள்ளத்துக் கிளைகளோடு உயப்போகு
வான் போல
எழுவுறழ் தடக்கையின் இனம்
காக்கும் எழில்வேழம்.

இந்த அழகிய பாடலை எழுதியவர் பெருங்கடுங்கோ என்பவர்.

கலித்தொகை நூலின் மற்றொரு பகுதி குறிஞ்சிக்கலி. மலைச்சாரலில் ஆண் யானை ஒன்று திரிந்து கொண்டிருக்கிறது. புலி ஒன்று அந்த யானையைப் பாய்ந்து தாக்குகிறது. அதனால் சினம் கொண்ட யானை, புலியின் தொடையிலே தனது கொம்புகளை ஊன்றி அதைக் கொல்லுகிறது.

இதைச் சொல்லுகிற கவிஞர், பாரதப் போர்க்களத்தில் வீமனிடம் அடிபட்டுத் துரியோதனன் இறக்கும் காட்சியை உவமையாகக் காட்டுகிறார்.

கௌரவர்கள் நூறு பேர். அவர்களுக்குத் தலைவன் துரியோதனன். அறத்தை ஒழித்துப் பாவத்தையே கொண்டவன் அவன். போர்க்களத்தில் அவனது தொடையைத் தனது கதாயுதத்தால் அடித்து வீமன் கொன்றான். அதைப் போல, புலியின் தொடையில் குத்தித் தனது பகையை ஒழித்தது எழில் யானை-

என்று குருசேத்திரப் போரில் துரியோதனனை வீமன் கொன்ற செய்தி.

முறமசெவி மறைப்பாய்பு முரண்
செய்த புலிசெற்று
மறந்தலைக் கொண்ட நூற்றுவர்
தலைவனைக்
குறங்கு அறுத்திடுவான்போல்
கூர்நுதி மடுத்ததன்
நிறம்சாடி முரண்தீர்த்த நீள்மருப்பு
எழில்யானை

எனக் குறிஞ்சிக்கலி 16வது பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை இயற்றியவர் கபிலர்.

பழங்காலத்தில் காளை மாட்டை அடக்கியவர்க்கே கன்னிப்பெண்ணைத் திருமணம் செய்து தருவது வழக்கம்; இதனை 'ஏறு தழுவுதல்' எனத் தமிழ் நூல்கள் கூறும். இவ்வீரச் செயலை மேற்கொள்ளும் இளைஞர்கள் வெற்றி பெறுவதும், சில சமயங்களில் வீர மரணம் அடைதலும் உண்டு.

இந்த வீர விளையாட்டில் கலந்து கொள்கிறான் ஓர் இளைஞன். பாய்ந்து வந்த காளைமாடு தன் கொம்புகளால் அவனுடலைக் குத்திக் கிழிக்கிறது. இந்தக் காட்சியைக் காட்ட விரும்பும் புலவர், வீமன் துச்சாதனனின் நெஞ்சத்தைப் பிளந்து சிதைத்த காட்சியை உவமையாகச் சொல்லுகிறார். எப்படி?

உலண்டு என்னும் பட்டுப் புழுவைப் போலக் கருஞ்சிவப்பு நிறத்தை உடைய காளை மாடு ஒன்று பாய்ந்து வருகிறது. அஞ்சாமல் அதனைப் பிடித்து அடக்குவதற்குத் தயாராக நிற்கிறான் இளைஞன் ஒருவன். காளை அருகில் வந்து விட்டது. இளைஞன் அதன் மீது பாய்கிறான். காளை அவனோடு போராடி அவன் சாகுமாறு குத்தித் தன் கொம்புகளால் அவனுடலைக் குலைக்கிறது. இந்த நிலையில் காளைமாடு எப்படி காட்சி அளிக்கிறது தெரியுமா?

அழகிய நடையை உடைய திரௌபதியின் தலைமயிரிலே கை நீட்டிய துச்சாதனனைப் போர்க்களத்தில் நெஞ்சத்தைப் பிளந்து, பகைவர் நடுவே தன் வஞ்சினத்தை நிறைவேற்றிய வீமனைப் போல் அல்லவா இருக்கிறது — என்று ஏறு தழுவும் வீர விளையாட்டைக் காணும் ஆயர் குல மகளிர் உரையாடுகிறார்களாம்.

சோழன் நல்லுருத்திரன் என்பவர் முல்லைக்கலி முதற்பாடலில் இந்தக் காட்சியை,

மேற்பாட்டு உலண்டின் நிறனொக்கும்
புன்குருக்கண்
நோக்கஞ்சான் பாய்ந்த பொதுவனைச்
சாக்குத்திக்
கோட்டிடை கொண்டு குலைப்பதன்
தோற்றம்காண்!
அம்சீர் அசையியல் கூந்தல்
கைநீட்டியான்
நெஞ்சம் பிளந்திட்டு நேரார்
நடுவண்தன்
வஞ்சினம் வாய்த்தானும் போன்ம்.

என்று ஓர் இலக்கிய ஓவியமாக நமக்குக் காட்டுகிறார்.

பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்த் தோன்றிய வீரகாவியம் பாரதம். பாரத நாட்டின் வடபகுதியில் தோன்றிய இக்காவியம் சமஸ்கிருத மொழியில் முதலில் எழுதப்பட்ட இப்பாரதக் கதை — இன்று காலம் இடம் மொழி என்னும் எல்லைகளையெல்லாம் கடந்து, ஈராயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட செந்தமிழ் இலக்கியமாகிய கலித்தொகையில் இடம் பெற்று விட்டது.

அகப்பொருள் இலக்கியமாகிய கலித்தொகை, வீமனின் வீரத்தை விளக்கும் பாரதக் கதை நிகழ்ச்சிகளை இவ்வாறு சுவைபடச் சொல்லிக் கற்பவர்களை மகிழ வைக்கிறது.

*

சென்ற இதழ்த் தொடர்ச்சி

# ஸ்ரீ முஷ்ணம்

தேவர்களின் வேண்டுகோளுக்கிரங்கி ஸ்ரீ பூவராஹப் பெருமான் ஸ்ரீமுஷ்ணத்திலேயே நித்ய வாசம் பண்ணுவதாக பிரதிக்ஞை பண்ணி, இந்திரன் அமைத்த ஆனந்த பவனத்தில் அமர்ந்தார். (வராஹப் பெருமாள் அயனை நோக்கி, "இந்த ஸ்ரீமுஷ்ண ஸ்தலம் மிகவும் ரமணீயமாகவுள்ளது. நீரும் வேத மந்திரங்களால் என்னை ஆராதிப்பீர். மற்ற ஸ்தலங்களைவிட இது தலைமையாகும். இதைச் சுற்றி மூன்று யோஜனை தூரமளவும் கயா, பிரயாகை, காசி முதலிய புண்ணிய ஸ்தலங்களைவிட



ஸ்ரீதேவி பூதேவி சமேத ஸ்ரீயக்ஞ வராஹன்

நூறுமடங்கு விருடையதாக ஸ்ரீமுஷ்ணம் விளங்கும். க்ஷீராப்தியில் சுவேத வராஹ சுயம்பு விமானம் ஒன்று வாயுவினால் ஆராதிக்கப்பட்டு வருகின்றது. அந்த விமானத்தை வாயு மூலம் இங்கு கொண்டு வந்து பிரதிஷ்டை செய். அதில் நான் அமருகிறேன்." என்று கூறினார்.)

பின்னர் பிரம்மன், வாயு பகவான் எழுந்தருளச் செய்து கொண்டுவரப் பட்ட பாவன விமானத்தில் கீழே, ரிஷிச்ரேஷ்டர்கள் வேத பாராயணங்கள் செய்ய ச்வேத த்வீப வாசிகளும், இந்திராதி தேவர்களும் "ஜிதந்தே" ஸ்தோத்திரங்களினால் துதிக்க, திருவனந்தாழ்வான் குடைபிடிக்க, கருடாழ்வாரும், ஸேனை முதலியாரும் கவரி வீச, தும்புரரும், நாரதரும் ஸாம கானத்தை வீணைகானமாக்க, தேவர்களின் 'ஜய விஜயீபவ' என்ற கோஷத்தினிடையில், கின்னர, கிம்புருட, யக்ஷ, சித்த, வித்தியாதர கணங்களும், சவேத த்வீபவாசிகளும் யமன், வருணன் முதலான அஷ்டதிக் பாலகர்களும், 'ஸப்த ரிஷி' களும் மலர்கள் தூவி, எம்பெருமானை ஸ்தோத்தரிக்க, தேவதுந்துபிகளான மங்கள வாத்தியங்கள் முழங்க, அனைவரும் ஸேவித்துக்கொண்டிருக்கையிலேயே சித்திரை மாதம் ரேவதி நக்ஷத்திரத்தோடு கூடிய சுப வேளையில் பாவன விமானத்தின் கீழே, ஸ்ரீபூவராஹ மூர்த்தியாய், புன்சிரிப்போடு கூடியவராய் "ஸாளக்ராம" ஸ்வரூபியாய் ஸேவை சாதித்தார். பிரம்மாவும் ஏனைய தேவர்களும், ரிஷி கணங்களும் கண்களில் ஆனந்த பாஷ்பத்துடன் துதித்தனர். பின்னர் பிரம்ம தேவர் ஸ்ரீ பூவராஹப் பெருமாளுக்கு கர்பக்ருஹம், அர்த்த மண்டபம், அலங்கார மண்டபம், அபிஷேக மண்டபங்கள் கட்டுவித்து, மாசி மாதத்தில் சுக்ல பக்ஷ ஸப்தமி பரணீ நக்ஷத்திரத்தில் துவஜா ரோஹணம் செய்து, ஏழாம் நாள் திருத்தேர் உத்ஸவம் நடத்தி, எட்டாம் நாள் கீழ் ஸமுத்திரத்தில் தீர்த்தவாரி கண்டருளப்பண்ணி, பின்னர் துவஜாவரோஹணம் செய்து விடாயாற்றி உத்ஸவமும் செய்வித்தார்.

ஸ்ரீமுஷ்ணத்திற்கு வடக்கே ஐந்து மைல் தொலைவில் வளையமா தேவி என்றொரு ஸ்தலம் உண்டு. அந்த க்ஷேத்திரத்தில் காத்தியாயனர் என்கிற ரிஷிஒருவர்தனக்குப்பிள்ளைப் பேறின்றி, வேதநாராயணப் பெருமாளைப் பிரதிஷ்டை செய்து வணங்கி வந்தார். எம்பெருமான் காத்தியாயன ரிஷியின் தவத்தை மெச்சி அவருக்கு அனுக்ரஹிக்கத் திருவுள்ளம் பற்றி, ரிஷி தவம் செய்த ஹோமாக்னியில் அக்னியை உண்டாக்கப் பயன்படுத்தும் மாத்திரைக் கடைக் கோலில் அடியில் பார்வதி தேவியும் நுனியில் லக்ஷ்மி தேவியும் அவதரிக்குமாறு ஆக்ஞாபித்தருளினார். ஸ்ரீமந்

கோ. க. வா. கோவிந்தராஜ
பாவஞசார்யா ஸ்வாமி.
ஸ்ரீரங்கம்.

நாராயணனின் ஆக்ஞைப்படியே இருவரும் அவதரிக்க, இரண்டு குழந்தைகளையும் அகமகிழ்ந்த பாசத்துடன் எடுத்து வளர்த்து பார்வதிக்குப் பெரியநாயகி என்றும், லக்ஷ்மிக்கு கமலவல்லியென்றும் பெயரிட்டு வளர்த்து வந்தார். பெரியநாயகியைப் பருவம் அடைந்தவுடன் சிவபெருமானுக்குத் திருமணம் செய்து வைத்தார். கமலவல்லியோ ஸ்ரீபூவராஹனையே திருமணம்செய்து கொள்வேன் என்று தவம்புரியத் துடங்கினாள். எம்பெருமானும், தூய படிகம் போன்ற மேனியும், எழில் கொழிக்கும் அங்கங்களும் மன்மதனையொத்த அழகும், கோடி சந்திரன் கூடித் தோன்றினால் போல் ஆனந்தத்தைப் பரப்பும் உருவும் கொண்ட கல்யாண குணசாகரமாகத் தோன்றினார். கமலவல்லியோ மிகவும் மகிழ்ந்து போய், ஆசிரமத்தில் விருந்துண்ணுமாறு வேண்டினாள். வராகப் பெருமானோ திடீர் என்று அந்தர்த்தனமாகி விட்டார். ஏமாற்றமடைந்த கமலவல்லி தன்முன் தோன்றிய ஸ்ரீவராகப்பெருமானின் ஓவியத்தை வரைந்து, அடிபணிந்து கண்ணீர்



ஸ்ரீமத்வாசாரியார் ஸ்தாபித்த வேணு தீர்த்தம்

களை நடத்தினர். சிவன் மற்றும் தேவர்கள் எல்லோரும் வந்து திருமாலின் கட்டளைப்படி பிரமன் திருமணச் சடங்குகளை நடத்தி பெருமாள் பிராட்டிக்கு திருமாங்கல்ய தாரணம் செய்து, கமலவல்லியை அம்புஜவல்லி என்று அழைத்தார். அம்புஜவல்லித் தாயாருடன் சப்த கன்னிகையை (மஹேஸ்வரி, ப்ராம்ஹி, கௌமாரி, ஈஸ்வரி, இந்திராணி, வராஹி, வைஷ்ணவீ) தோழிகளாகக் கூட்டி ஸ்ரீமுஷ்ணத்துக்கு அனுப்பிவைத்தார். இக்கன்னிகைகளுக்கு குழந்தையம்மன் என்று பெயர்.

கடலினின்றும் பூமி தேவியை மேலே கொணர்ந்து தன் மூலம் தேவர்களின் துயரைத் துடைத்து, பெருக்கினுள். மேலும் அவளைச் சோதிக்க எண்ணிய வராகப் பெருமான் பிரமனை அனுப்பினுர். பிரமனும் வேதியர் உருவில் சென்று கமலவல்லியை நோக்கி ''நீ விரும்புகிற வராக மூர்த்திக்கு குலம் கோத்திரம் கிடையாது. அவரை ஏன் நீ விரும்புகிருய்?'' என்று கூறினுர். இதை செவிமடுத்த கமலவல்லி சினந்து 'ஸர்வேச்வரனையா பழிக்கிறீர். உம்மோடு பேசுவதற்கே யோக்கியதை இல்லை' என்று கூறி வேகமாகச் சென்றுவிட்டாள். ஸ்ரீ வராஹப் பெருமானும் மிகவும் மகிழ்ந்தவராய் திருமணத்திற்கு நாள் குறிக்குமாறு ஆக்ஞாபித்தார். நாள் குறிக்கப்பட்டு விமரிசையான ஏற்பாடுகள் எல்லாம் நடந்தன.

அப்பொழுது எம்பெருமானும் வராஹரூபம் நீங்கி மஹா ஸௌந்தர்ய ரூபத்துடனும், பீதாம்பரதாரியாய், ஸகல வித பூஷணங்கள் திகழ, புன்னகைக் காட்டி, தன் கருணைக் கண்களால் நோக்கி, அமர்ந்திருக்கின்ற பெருமானையும், கமலவல்லியையும் கண்ட முனிவர் தன் வளர்ப்பு மகளின் தவத்தை மிகவும் மெச்சி குதூகலத்தோடு திருமண ஏற்பாடு



பரமபத வாசல் தோற்றம்

அவர்கள் வேண்டுகோளை நிறைவேற்றியவுடன் வைகுண்டத்துக்குத் திரும்பிச் செல்ல பெருமான் எண்ணம் கொண்டவுடன், ஸ்ரீ பூமிதேவி எக்காலமும் தன்னிடமே தங்கியிருக்கும்படிக்கு பிரார்த்தித்துக்கொண்டதின் பேரில், பூமி மேல் ஸ்ரீமுஷ்ணம் என்கிற சிறந்த இடத்தில் வாசம் செய்யத்தொடங்கினார். பூமிதேவியோடு தங்கி வசிப்பதால் வராஹப் பெருமானுக்கு பூவராஹன் என்று திருநாமம். ஸ்ரீதேவியே அம்புஜவல்லியாகப் பிறந்து அவரைத் திருமணம் செய்து கொண்ட மஹிமையினால் ஸ்ரீ பூவராஹன் என்று பெயர் ஏற்பட்டது.

ஸ்ரீ முஷ்ணத்தில் எல்லா தீர்த்தங்களும் சேர்கின்றன. எல்லா தேவதைகளும் கூடுகின்றனர். ரிஷிகளும் வேத விற்பன்னர்களும் எப்பொழுதும் வசிக்கின்றனர். அத்தகைய இந்த புண்ணிய க்ஷேத்திரத்தைப் பார்த்தாலும், ஸ்மரித்தாலும் புண்ணியம் உண்டாகி பாபம் அகன்று முக்தியடையலாம்.

ஹிரண்ணியனின் புத்ரனான பிரகலாதன் ஸ்ரீ முஷ்ணத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீபூவராஹப் பெருமானின் அருளுக்குப் பாத்திரனாகி, பக்தர்களுக்குள்ளே முதன்மையாகவும், பாகவத ச்ரேஷ்டனாகவும் திகழ்ந்து பிறகு நரஸிம்ம அவதாரத்தின் பொழுது ஸ்ரீநரஸிம்மனை தியானித்து சாயுஜ்யம் அடைந்தான். ஸ்ரீமுஷ்ண க்ஷேத்திரத்திலுள்ள தீர்த்தங்களின் மஹிமை வராஹ புராணத்திலுள்ளது. நித்ய புஷ்கரிணியில் நீராடுதல், ஸ்ரீ பூவாராஹப் பெருமானை ஸேவித்தல், அவன் ஸன்னிதியில் ஏதாவதொரு கைங்கர்யம் பண்ணுதல், அது இயலாவிட்டால் ஸேவார்த்திகளுக்கு தரிசனம் பண்ணுவித்தல், கீதையை பாராயணம் பண்ணுதல் இவைகள் ஒவ்வொன்றும் முக்தியைத் தரவல்லது.

கோவிலுக்குக் கீழ்ப் பகுதியில் ஸ்ரீ லக்ஷ்மீ நாராயணன் சன்னிதியும், லக்ஷ்மீ நாராயண ஸரஸ் என்கிற தீர்த்தமும் உள்ளது. இங்கே ப்ரத்தியும்னர் பூஜைக்குரியவர். இதில் தீர்த்தாமாடி, ஸ்ரீக்ருஷ்ண மந்திரத்தை ஜபித்தால் இகலோக போகம், பரலோக மோக்ஷம் இவைகள் கிட்டும். கோவிலுக்கு அக்னி திசையில் பூமி தீர்த்தம் உள்ளது. ஸ்ரீ பூவராஹரை வழிபட்டு ஸ்ரீவராஹ மந்திரம் ஜபித்து, பூதானம் செய்து மேல்விடு பெறலாம். அதற்குக் கிழக்கே பிரும்ம தீர்த்தம் உள்ளது. இதற்கு ஜனார்தனர் தேவதை. பொன் தானம், வித்யாதானம் இரண்

டும் சிறப்புடையவை. குரு வாரத்தில் தீர்த்தாமாடி, ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாம பாராயணம் செய்தால் பாப மனைத்தும் போகும். முக்தி கிட்டும். அதற்குக் கிழக்கே அக்னி தீர்த்தம். பார்கவராமன் தேவதை. நில தானம் பாத்திர தானம் சிறப்புடையவை.

இங்கு நீராடி விஷ்ணு ஸூக்தம், 'ஜிதந்தே' ஸ்தோத்திரமும் ஜபிப்பது விசேஷம். ஸாயுஜ்யப் பதவி அடையலாம். ஸ்ரீபூவராஹ ஸ்வாமியின் ஆலயத்திற்கு மேற்கே வேணு தீர்த்தம் உள்ளது. வேணு தீர்த்தத்தை தண்ட தீர்த்தம் என்பர். வாயு பகவானின் அவதாரமாகப் போற்றப் படும் ஸ்ரீ ஆனந்த தீர்த்த ஸ்வாமிகள் காஷாயம் பெற்று கமண்டலம் ஏந்தி காசி, பிரயாகை முதலிய க்ஷேத்திரங்களையெல்லாம் சேவித்து விட்டு, நைமிஸம், திருப்பதியும் சேவித்து, தெற்கேயுள்ள திருவரங்கம், தோத்தாத்ரி முதலிய க்ஷேத்திரங்களிலும் எம்பெருமானை சேவித்து விட்டு ஸ்ரீ முஷ்ணம் வந்து நித்திய புஷ்கரிணியில் நீராடி, ஸ்ரீவராஹ மந்திரம் ஜபித்து, அரச மரம் வலம் வந்து ஸ்ரீ பூவராஹனை வணங்கி திருவீதியில் பிக்ஷைக்காக செல்லும் பொழுது, மேற்கே சிறிது தூரம் வந்து விட்டதை உணர்ந்தார். நேரமோ நடுப்பகல் சமயமாக இருக்கவே யோசித்தும், அங்கேயுள்ள ஒரு க்ருஹத்தின் முன் நின்று அமைதியாக குரல் கொடுத்தார். காந்திமதி என்று பெயருடைய அந்த வீட்டின் அம்மையார் ஸ்வாமியைக் கண்டு தான் கர்ப்பிணியாக இருப்பதாகவும், தன் கணவர் வெளியூர் சென்று இருப்பதாகவும், வெகு தூரத்திலுள்ள குளத்தில் தன்னால் தீர்த்தம் கொண்டு வர முடியாதபடியால் பிக்ஷை சாதிக்க இயலாததைக் கூறி மிகவும் வருத்தமடைந்தாள். உடனே ஸ்வாமிகள் இவள் துயரத்தைக் கண்டு ஸஹிக்காமல் அதை நீக்கும் பொருட்டும், தனக்கு அனுஷ்டான காலம் நெருங்குகிறபடியாலும், மேலும் முக்கியமாக ஸ்ரீ முஷ்ணத்திலுள்ள தீர்த்த கஷ்டங்களை நீக்கும் பொருட்டும் விசேஷமாகத் திருவுள்ளம் பற்றி, தன்னுடைய தண்டத்தினால் பூமியில் ஒரு கோடு போட்டுக் கிண்டினார். ஜலம் அற்புதமாகக் கிளம்பிக் குளமாயிற்று. அதில் அவர் நீராடி தனது அனுஷ்டானங்களை முடித்துக் கொண்டார். பின்னர் சில காலங்கள் தங்கியிருந்து தினமும் அக்குளத்திலேயே நீராடி அனுஷ்டானங்களை முடித்துக் கொண்டும், ஸ்ரீ பூவராஹப் பெருமானை சேவித்துக் கொண்டிருந்தார். இந்த தீர்த்தத்தை நினைத்தாலே மிகவும் புண்ணியம் உண்டு. ''இந்த தீர்த்தத்தில் மாசி மாதம் சுக்ல நவமியில் பௌம வாரத்தில் சூர்யோதயத்தில் நீராடுபவர்கள் தேவர்களுக்கு ஒப்பாவார்கள் என்றும், அவர்களுக்கு சகல விதமான மங்களங்களும் முக்தியும் உண்டு'' என்றும் ஸ்ரீ வராஹப் பெருமானின் அருளால் திருவாய் மலர்ந்தருளினார். இத்திருக்குளத்தில் தீர்த்தம் எக்காலத்திலும் வற்றுவதில்லை. தீர்த்தமானது பருகுவதற்கு மிகவும் இனியது. கரும்பின் சாற்றின் சுவையோடொக்கும். மிருத்யுஞ்சய தீர்த்தம் என்பது சுமார் இரண்டு மைல் தொலைவில் தீ மூலையில் உள்ளது; முன் ஒரு காலத்தில் கருட பகவான் அமிர்த்த கலசத்தை எடுத்துக் கொண்டு வருகையில், ஒரு சில அமிர்தத்துளிகள் இத்



நூற்றுக்கால் மண்டபத்தில் அமைந்துள்ள பலபீடத்துடன் கூடிய துவஜஸ்தம்பம்

திருக்குளத்தில் சிந்தியது. எனவே இத்திருக்குளத்தில் நீராடுபவர்களுக்கு ஆயுள் விருத்தியடைந்து, ஆரோக்கியமும் பெருகும் என்பது முன்னோர்கள் அனுபவ பூர்வமாகக் கண்ட உண்மை.

பெருமாள் சன்னிதியைச் சுற்றி பல தீர்த்தங்கள் இருந்த போதிலும் சித்திரா பூர்ணிமையில் உச்சிப் போதில் மூன்று கோடி தீர்த்தமும் இங்குள்ள நித்திய புஷ்கரிணியில் சேரும்படிக்கு, இந்திரனின் உத்திரவான படியினால், அன்று அவ்வமயம் தீர்த்தாமாடுவது விசேஷம். வைகாசி பூர்ணிமையில் சக்ர தீர்த்தத்திலும்; ஆனியில் பிரும்ம தீர்த்தத்திலும், ஆவணியில் சங்க தீர்த்தத்திலும், புரட்டாசியில் வெள்ளாறு சுவேத நதியிலும், ஐப்பசியில் மணி முக்தா நதியிலும், கார்த்திகையில் மிருத சஞ்சீவி தீர்த்தத்திலும், மார்கழியில் பார்கவ தீர்த்தத்திலும், தையில் பிரும்ம தீர்த்தத்திலும். மாசியில் கிழ் ஸமுத்திர தீர்த்தத்திலும், பங்குனியில் லக்ஷ்மீ நாராயண தீர்த்தத்திலும் நீராடுவது சிறப்புடையதாகும்.

இந்த தீர்த்தங்களில் நீராடி, அன்னதானம், சுவர்ண தானம், கோதானம், பூதானம், கன்னிகா தானம் அவரவர்கள் தகுதிக்கேற்ப செய்தால், அவ்வித தானங்களுக்கேற்ப அச்வ மேத, வாஜபேய யாகங்களின் பலன் உண்டு. இங்குள்ள உத்ஸவ மூர்த்தியை யக்ஞ வராஹன் என அழைக்கப்பட்டு வருவது தொன்றுதொட்டு வரும் சம்பிரதாயம். பிரமன் யாகத்தில் நின்றும் யக்ஞ வராஹன் சதுர்புஜத்துடனும், அபய கதா ஹஸ்தங்களுடன் தோற்றமளித்தார். "அளவற்ற தேஜஸுடைய யக்ஞ வராஹன் என்கிற பெயரை உடைய விஷ்ணுவை எவர்கள் வணங்குகிறார்களோ அவர்களுக்கெல்லாம் வணக்கம்" என்று பீஷ்மர் ஸ்தோத்திரம் செய்துள்ளார்.

நூறு கைகளைக் கொண்ட கரும் பன்றி க்ருஷ்ண வராஹம் நீரினின்று பூமியை மேலே கொண்டுவந்ததாக யஜுர் வேத தைத்திரீய ஆரண்யம் கூறுகிறது. யக்ஞ வராஹன் யக்ஞ ருபமாகவும், யக்ஞாங்கமாகவும், யக்ஞ பலத்தைத் தருவோனாகவும், யக்ஞத்திற்கு உரியவனாகவும் ஸ்ரீவராஹமந்திரம் கூறுகிறது. வாயு புராணம் வராஹ பெருமானின் திருமேனியை யக்ஞமாக உருவகித்து யக்ஞத்தின் உறுப்புக்களை வராஹத்தின் உறுப்புக்களில் பொருத்திக் காண்பிக்கிறது.

வராஹத்தின் நான்கு பாகங்களும் நான்கு வேதங்கள்; அது எழுப்புகின்ற 'குர்', 'குர்' என்கிற ஒலியே ஸாம வேத கோஷம்; தந்தம் யூப ஸ்தம்பம்; நா வேள்வித் தீ; உடலின் ரோமங்கள் தர்ப்பைப் புற்கள்; இரு கண்களும் பகலும், இரவும்; காதணிகள் வேதாங்கங்கள்; உமிழ்நீர் நெய்; மூக்கு சுருபம் என்னும் கரண்டி; முழங்கால் பசு; குளம்பு பிராயச் சித்தம்; எலும்பு மந்திரங்கள்; ரத்தம் சோமரசம்; பிராணன் அந்தராத்மா; இருதயம் தக்ஷிணை; சாயை பத்னி; தலை பிரம்மன்; குடல் உத்காதா; குறி ஹோதா; சரீரம் யக்ஞசாலை; நடை ஹவ்ய கவ்யம் என்பனவாம்.

(தொடரும்)

# இந்திய இதிகாஸ காவியங்களில் ஆஞ்சநேயன்



தியாக ப்ரும்மம், திருவையாற்றில் தினந்தோறும் சென்று வழிபட்ட ஆஞ்சநேயர்.

நமது பாரத தேசத்தை நான்கு திசைகளிலும் நான்கு நடமாடும் தெய்வங்கள் இன்றும் உயிரோடு இருந்து காத்து வருகின்றனர். விந்திய மலைக்குத் தெற்கேயுள்ள நம்மையெல்லாம் பார்வதி குமாரனாகிய சுப்ரமணியன் பாதுகாத்து வருகிறார்.

மேற்கே பரசுராமன் தனது க்ஷேத்திரத்தில் நடுநாயகமாக வீற்றிருந்து அத்திசையிலுள்ளவர்களைப் பரிபாலித்து வருகிறான். வடக்கே வாயு குமாரரும், சிரஞ்சீவியுமான ஆஞ்சநேயன், என்றும் ஸ்ரீராம தூதனாக விளங்கியவாறு நம்மைக் காவல் புரிந்து வருகிறான்.

கிழக்கே ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸருடன் நேருக்கு நேராகப் பேசிய துர்க்காதேவி என்ற காளி தேவி நம்மையும் நம் எல்லையையும் காத்து நிற்கும் தெய்வமாய் விளங்கி வருகிறாள். மத்தியில் ஆர்யா வர்த்தத்திலே காவல் புரியும் அசுவாத்தாமாவைக் காண்போரும் இன்றும் உண்டு.

இதிகாச காவியங்களில் ஆஞ்சநேயனின் வரலாறு ஓர் ஆனந்தசாகரமாகும். பல லீலா விநோதங்களைப் புரிந்தவன் வாயு புத்திரன். பிரம்மசாரியின் புலனடக்கம்; பிரகஸ்பதியை ஒத்த அறிவு; நியாய நிலை மீறாத நெறி: பக்திக் கடல்; குணக் கலைக் குன்று என்றெல்லாம் நிறைந்த மாமுனியானவன் வீரத்துக்கு இலக்கணம் வகுத்து, விவேகத்துக்கு வழி காட்டி, பண்புக்கு பாத்திரமாகி, பரந்தாமனின் திருவடிச் சேவையில் காலமெல்லாம் அர்ப்பணித்துக் கொண்ட கர்ம வீரனவன்.

ஆஞ்சநேயனுக்கு ஹனுமான், மாருதி, வாயுபுத்திரன், சஞ்சீவய்யா என்றெல்லாம் பெயர்களுண்டு. எனினும், ஹனுமான் என்பதே பொதுவானக் காரணப் பெயராகும்.

இராமாயணக் காவியத்தில் மூன்று இடங்களில் விளக்கப்பட்டுள்ளது இவனுடைய பெருமை. அதுபோல மஹா பாரதத்திலும் இரண்டொருவிடங்களில் காணப்படுகிறது. துருவி ஆராய்ந்தோமானால் அறியலாம் மெய்ப்பொருளை!

கிஷ்கிந்தா காண்டத்தில் ஜாம்பவானாலும், சுந்தரகாண்டத்தில் ஆஞ்சநேயனாலும், உத்திர காண்டத்தில் அகஸ்திய முனிவராலும் காரணம் தரப்பட்டுள்ளது. ஆஞ்சநேயனே தனது வாக்கில், "ஸ்வேன கர்மணா ஏவ ஹனுமான் இதி லோகே விக்யாத:" என்கிறான். அதாவது தன் சொந்த கர்மாவின் காரணமாகத் தான் தனக்கு "ஹனுமான்" என்ற பெயர் வந்தது என்கிறான். இந்திரன் வஜ்ராயுதத்தினால் தாக்கியதன் விளைவாகவே கன்னம் கோணலாகி விட்டது. அதனாலேயே "ஹனுமான்" என அழைக்கப்படலானான்.

## பிறப்பின் மகிமை

ஆஞ்சநேயனின் பிறப்பின் மகிமையை, சிறப்பைச் சிறிது பார்ப்போம்! அஞ்சனாதேவியின் அரும் புதல்வன் ஆஞ்சநேயன். யார் இந்த அஞ்சனாதேவி? என்ற கேள்வி எழுகிறதல்லவா? தேவலோகத்தில் அப்ஸர ஸ்திரீகளில் "புஞ்சிதஸ்தலை" என்றொருத்தியிருந்தாள். ஒருசாபத்தினால் அவள் பூமியில் "குஞ்சரன்" என்ற வானரோத்மனுக்குப் பெண்ணாகப் பிறந்து "அஞ்ஜனி" என்ற பெயருடன் கானகத்தில் சஞ்சரித்து வந்தாள்.

**சன்மிஷ்டை-தஞ்சை.**

யௌவனப் பருவமடைந்ததும் அவள், மேரு பர்வதத்தின் வானர ராஜனான "கேஸரி" என்னும் வானரனின் பத்தினியானாள். அவர்கள் இருவருக்கும் நீண்ட காலத்துக்குப் புத்திர பாக்கியம் கிட்டாததால், அவள் வாயுதேவனை நோக்கிக் கடும் தவம் மேற்கொண்டாள்.

அப்ஸரஸப் பெண்ணான அவளுக்கு ஒரு அருமை மகன் பிறந்து, அவனே அயோத்தியா ஸ்ரீராமனுக்கு அரும் சேவை செய்ய வேண்டியிருந்ததால் வாயு தேவன் அவளுக்கு ஆண் மகவொன்று பிறந்திட அருள் புரிந்தான். சூரியனைப் போன்ற தேஜஸ்;

வஜ்ரம் போன்ற சரீரம்; செவிகளில் ரத்தின குண்டலங்கள் ஆகியவற்றோடு கௌபீனதாரியாக அவதரித்தவன்தான் நம் ஆஞ்சநேயன்.

பிறந்தவுடன் பசி பொறுக்காத ஆஞ்சநேயன் "தக தக" வென்று சிவப்பாகக் காட்சி தந்த உதய கால சூரியனைப் "பழம்" என்று நினைத்து ஓடோடித் தாவிப் பறிக்க நெருங்கினன். அது கண்ட வாயுதேவன் தன் மகன் சூரியனால் தகிக்கப்பட்டுக் கீழே விழுந்து விடுவானோ என்று அஞ்சி அவனைச் சுற்றிலும் தென்றலைத் தவழச் செய்தான்.

அன்று சூரிய கிரகணம்; ராகு வேறு சூரியனைப் பிடிக்கச் சென்ற சமயத்தில் ஹனுமான் ராகு மீதும் வேகமாய்ப் பாய்ந்தான்; திடுக்கிட்ட ராகு பகவான் தேவேந்திரனிடம் முறையிடவே இந்திரனும் "ஐராவதம்" என்னும் யானை மீதேறி



நாமக்கல் ஆஞ்சநேயர்

"யார் அவன்"? என்று பார்க்கப் புறப்பட்டு வந்த போது, ஹனுமான், ஐராவதத்தின் அழகிய "மஸ்தகத்தை"க் கனி என்று கருதி அதன் மீது பாய்ந்தான்.

இதைக் கண்ட இந்திரன் சினங்கொண்டு வஜ்ராயுதத்தினால் ஹனுமான் தாடையில் பளீர் என்று அடித்தான். ஹனுமான் மயங்கி விழுந்ததைக் கண்ட வாயுதேவன் மகனைத் தூக்கிக் கொண்டு அருகிலிருந்த குகைக்குள் புகுந்து விட்டான். மூன்று லோகங்களிலும் காற்றே வீசாமல் தேவர் முனிவரெல்லாம் செய்வதறியாது பிரம்மதேவனின் தலைமையில் வாயுதேவனிடம் வந்து சரணடைந்து அவரைச் சமாதானப் படுத்தினர். பின் வையம் பிழைக்க வழிபிறந்தது.

இவ்வாறாக தாடையில், கன்னத்தில் சின்னத்தையடைந்த (ஹநு= கன்னம், தாடை; மந்தம்=சின்னம்) ஹனுமானை அஞ்சனாதேவியின் பாக்கியமாகிய ஆஞ்சநேயனை, அஞ்சலி செய்யாத ஒரு ஹிந்துவும் பாரதத்தில் இருப்பாரா? இரார்; இருக்கவும் முடியாது. உள்ளத்திலாவது துதித்துக் கொண்டுதான் இருப்பார்கள் என்பது திண்ணம்.

## ஆதி காவியத்தில் ஆஞ்சநேயன்

சுந்தர காண்டம் முழுவதுமே ஸ்ரீ ஹனுமானது பிரபாவமேயாகும். இனி இராமாயண ஸ்லோகத்தைப் பார்ப்போம். அதில்

"மனோ ஜவத மாருத துல்ய வேகம்
ஜிதேந்த்ரியம் புத்தி மதாம் வரிஷ்டம்
வாதாத்மஜம் வானர யூத முக்யம்
ஸ்ரீராம தூதம் சிரஸா நமாமி"

என்றபடி, "மனோவேகமாய் தன் பிதா வாயு பகவானுக்குச் சமானமான வேகத்துடன் இலங்கைக்கு, ஆகாய மார்க்கமாகத் தன்னுடைய பிரும்மச்சர்ய மகிமையால், எளிதில் சென்று, நடு இரவில் ஆடை போனவிடம் தெரியாது தூங்கிய ஸ்திரீகளைக் கண்டதும், தன் இந்திரியங்களை வென்ற நிலையில் மெதுவாக நடந்து தன்னுடைய குலத்துக்கே உரித்தான குரங்கு சுபாவத்துடன் சென்றான்" ஆஞ்சநேயன்.

முதலில் ஸீதாதேவியைச்சந்தித்து அவளுடன் குதர்க்கம் செய்து, பின் தன் தவறுணர்ந்து சுயபுத்தியை உபயோகித்து மண்டோதரி ஸீதாதேவியல்ல என உணர்ந்து ஸ்ரீராம கதையை ஸீதாப் பிராட்டியிடமே விவரித்துச்சொன்னான் ஆஞ்சநேயன்.

பிராட்டி ஆரம்பத்தில் ஹனுமனை நம்பவில்லை. இராவணனுடைய வேஷம்தான் அநுமனும் என்று அவள் நினைத்திருக்கலாம். அப்போது அஞ்சநேயன் தன் விஸ்வரூபத்தை எடுத்துக் காட்டவேதான் ஸீதா பிராட்டிக்கு நம்பிக்கை பிறக்கிறது. "மாருதாத்மஜன்" எப்போதும் எதையும் சாதிக்க வல்லவன் என்பதை இது காட்டுகிறது.

பின் பிராட்டியிடம் கணையாழியைக் கொடுத்து சூளாமணி பெற்றுத் தன் பிதாவைநினைத்து,இக்கரை வந்தவுடன் ராஜதூதனாகச் சென்ற வானரங்களுக்குப் பிரதமர் ஆகி விடுகிறான்.

இவ்வாறு "மனோஜவம்" என்ற த்யான ஸ்லோகம் முழுமையும் நம் உள்ளத்திரையிலேயே சித்தரித்து விடுகிறது. இந்த ஸ்லோகங்கள் ஏதோ ஆஞ்சநேயனது குணநிசயங்களைப் போற்றும் வெறும் பாட்டுக்கள் அல்ல! சுந்தர காண்டம் முழுமையும் ஒளி வீசும் ஆஞ்சநேய மகிமையாம் இவை!

## மஹாபாரதத்திலே ஆஞ்சநேயன்

இராமாயண காவியம் மட்டுமின்றி மஹாபாரதத்திலும் ஆஞ்சநேயனின் மகிமையை நன்கு சித்தரிக்கப்பட்டுள்ளதைக் காண்போம்!

பஞ்ச பாண்டவர்களில் ஒருவனான அர்ஜுனன் தீர்த்த யாத்திரையை ஒருவாறு முடித்துக் கொண்டு,சேதுக் கரைக்கு வரும் போது அங்கே கடற்கரை வெண்மணற்பரப்பில் மாருதி "ராம நாமம்" சொல்லி ஜபம் பண்ணிக் கொண்டிருக்கிறான். அப்போது அர்ஜுனன் சேதுவில் ராமன் கட்டிய பாலத்தைப் பார்த்து, "நானாக இருந்தால் என் அம்புகளாலேயே பாலம் கட்டி இருப்பேன்" என்று ஒருவித ஆணவத்துடன் கூறுகிறான்.

இதைக் கேட்ட ஹனுமான், "உன் அம்பு பாலத்தின் மீது நான் நடந்

தால் அது எளிதில் நொறுங்கிவிடும்'' என்கிறான். இதைக் கேட்ட அர்ஜுனன் வீராப்புடன் ''அம்புப் பாலம்'' கட்ட ஹனுமான் அதில் நடந்து நொறுங்கச் செய்து விடுகிறான்.

இந்த அவமானம் தாங்க முடியாத அர்ஜுனன் தற்கொலை செய்து கொள்ள முயன்ற போது, வேதிய அந்தணனொருவர் அங்குத் தோன்றி மத்யஸ்தம் செய்து வைக்கிறார். அதன்படி மீண்டும் அர்ஜுனன் ''அம்புப் பாலம்'' கட்ட ஹனுமானால் அதை முறியடிக்க முடியவில்லை. அதைக்கண்டு மனமுடைந்த ஆஞ்சநேயன் முன் ஸ்ரீ ராமபிரானே நேரில் தோன்றுகிறார்; ஹனுமானைச் சமாதானப் படுத்துகிறார். இக்கட்டத்தை மஹாபாரதத்தில் வியாஸ பகவான் அற்புதமாகச் சித்தரித்துள்ளார்.

மற்றொரு இடத்தில் ஹனுமான், தன் தம்பி பீமசேனனின் அகம்பாவத்தை எளிதில் அடக்குகிறார். எப்படியெனில், தன் மனைவி திரௌபதியின் விருப்பத்திற்கிணங்க, ''ஸௌகந்திகா'' புஷ்பத்தைத் தேடிச்சென்ற பீமசேனன் போகும் வழியில் ஆஞ்சநேயனைக் கண்டான். அவன் யாரென அறியாது வழியில் படுத்திருந்த ஆஞ்சநேயனிடம் அதிகாரத்துடன் "ஏ, குரங்கே! போகும் வழியை விடு!'' என்கிறான்.

அதற்கு ஆஞ்சநேயன் ''எனக்கோ வயதாகி விட்டது; எழுந்திருக்க முடியவில்லை. ஆகையால் நீயே என் வாலைச் சிறிது நகர்த்தி விட்டுப் போயேன்!'' என்றான். பீமனும் அதற்கு இசைந்து வாலைத் தூக்க அது முடியாமல் அவமானப்பட்டு மன்னிப்புக் கேட்டான். பின் தன் கூடப்பிறந்த தமையன் ஹனுமான் என்றறிந்து அகமகிழ்கிறான். பீமனிடத்தில் ஆஞ்சநேயன் நிகரற்ற வாஞ்சை கொண்டான்; ''ஸௌகந்திகா'' புஷ்பம் கொண்டுவர பல உதவிகள் செய்தான்.

தவிர, ''பின்னால் நடக்கப்போகும் மஹாயுத்தத்தில் அர்ஜுனன் த்வஜத்தில் வீற்றிருந்து எதிரிகளின் மனத்தைக் கலக்குவதாயும், பீமசேனன் சங்கத்தை ஊதும் பொழுதெல்லாம் தானும் கர்ஜித்து சங்கத்வனியைப் பெருக்குவதாகவும்'' சிரஞ்சீவியான மாருதி அவனுக்கு வரம் கொடுத்து அனுப்பியதாக மஹாபாரதம் வனபர்வதத்தில் ஒரு கதை சொல்லப்படுகிறது.

எங்கெல்லாம் ''இராம கதை'' நடக்கிறதோ, ''கதாகாலட்சேபம்'' நடக்கிறதோ அங்கெல்லாம், தாம் சிரவணம் செய்வதாக நமக்கு ஸ்ரீ ஆஞ்சநேயன் சத்தியப்பிரமாணம் செய்து தந்திருக்கிறார். இது உண்மை; வெறும் புகழ்ச்சி இல்லை. இதனால் தான் ஸ்ரீ துளஸிதாஸர் காசி க்ஷேத்திரத்தில் இராமாயண கதை (ஸ்ரீராம சரித மானஸம்) நடக்கும் போது சபை முழுவதும் ஒருமுறை வலம் வந்து, கைதொழுத பிறகே கதை கூறிவந்தார் எனச் சொல்லப்படுகிறது.

ஏனெனில், சபையிலுள்ள பக்தர்களில் ஒருவராக ஸ்ரீ ஆஞ்சநேயர், யாரோ ஒருவர் உருவத்தில் வந்து அமர்ந்து கதை கேட்பார் என்பது அவருக்கு நன்கு தெரியும். இதே மாதிரிதான் பாரசீகமும் உருதுவும் நன்கு பயின்ற ஸ்ரீகுமரகுருபர ஸ்வாமிகள் கம்பராமாயணத்தைப் பிரவசனம் செய்யும் போது, அங்கு வந்த ஸ்ரீகோஸ்வாமி துளஸிதாஸர் மறைந்திருந்து கேட்டுவந்தார் என ஆன்றோர் கூறுவார்.

தவிர ஸத்குரு தியாகராஜ ஸ்வாமிகள் இராமனை நினைத்து கீர்த்தனங்கள் பாடும்போது மறைந்திருந்து ஸ்ரீஆஞ்சநேயன் அதைக் கேட்டு மெய் சிலிர்த்து ஆனந்தம் அடைவாராம்! ஏன்? சாட்சாத் ஸ்ரீ இராம பிரானே அதைக் கேட்டு கானம் முடியும் வரை அங்கு அமர்ந்திருப்பார் எனச் சொல்லப்படுகிறது. தியாகராஜருக்கு நேரில் திவ்ய தரிசனமும் கொடுத்ததுண்டு!

## கலை உலகில்

காசி ஹனுமான் கட்டம் நம் தென்னிந்தியருக்கே உரித்தானது. ஆங்குள்ள ஒவ்வோரு ஹனுமான் கோயிலிலும் இன்றும் ஓர் ''அகடா'' உண்டு. ''அகடா'' என்றால் தேகப் பயிற்சிக்கூடம் என்பது பொருள். இந்த அகடாக்களில் உள்ளவர்கள் தங்களுடைய தேகத்தை, பீமசேனனைப் போல் உருவாக்கி வைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஹனுமான் அருளிய தேக பலமாகக் கொண்டு ஹிந்து சமுகத்திற்கு வீர புத்திரர்களாக விளங்கி வருகிறார்கள்.

தென்னாட்டுக்கோவில்களில் ஹனுமான் சிற்பங்கள் ஏராளமாக உள்ளன. ஹனுமனுக்குத் தனிக்கோயில்களும் அநேகம் உண்டு. தமிழ்நாட்டில் நாமக்கல், சுசீந்திரம் கோயிலுள்ள அநுமனைப் பற்றி அறியாதவர் இருக்க முடியாது. தென்னாட்

### ஸ்வயம் வ்யக்தம்

ஸ்ரீமான் நாராயணன் அர்ச்சாவதார மூர்த்தியாக தமது திருவுள்ளப்படி தாமே அவதரிப்பது ஸ்வயம் வ்யக்தம் ஆகும்.

ஸ்ரீரங்கம் ஸ்ரீமுஷ்ணம், திருவேங்கடம், ஸாளக்ராமம், நைமிசம், தோதாத்ரி (வானமாமலை) புஷ்கரம், பதரி ஆகிய எட்டு திருத்தலங்கள் ஸ்வயம் வ்யக்த தலங்களாகும்.

— கமலா மாரியப்பன், கோவை.

## மதிப்புரை

# ஆஞ்சநேயர் தோத்திர பாமாலை

**நூல் ஆசிரியர் : வரகவி என். வி. இளஞ்செழியன் விலை : ரூ. 6/-**

வரகவி என்.வி. இளஞ்செழியனின் கை வண்ணத்தைக் கண்டோம். ஆக்கியோனனின் அந்தாதித் தொடர்பில் உள்ள ஒன்று என்னைக் கவர்ந்தது.

'' அநுமன் திருவிளையாடலில்
அழகுமிகு நாமக்கல் தோன்றல் ''

அநுமனை மையமாகக் கொண்டது நாமக்கல் என்ற நன்னகர். நல்ல உயரம், வலிமை தாங்கிய முகம்: கவரக்கூடிய தோற்றம். இவ் அநுமனுக்கு அந்தாதி அளித்த இளஞ்செழியன் நெடுஞ்செழியனாக ஓங்குக.

நாமக்கல்லில் வெய்யிலில் வாடி விற்கும் ஆஞ்சநேயருக்கு பத்து விதமான அபிசேகம் செய்யும் செய்யுட்கள் வெகு அழகாகத் திகழ்கின்றன. அபிசேக வாழ்த்துறைகள் பத்தும் படித்தோர் மனதைக் கவர்கின்றன.

ஆஞ்சநேயர் ஓர் மாபெரும் ப்க்த சிகாமணியாவர். இராமபிரான் அயோத்தியின்கண் சரயுநதியில் எல்லா படைப்புகளுடன் முழுகும் போதும், அநுமன் ஒருவனையே விட்டுச் சென்றார்.

பெரியாழ்வார் தம் பத்துப்பாடல்களில், இராம தூதனைப் புகழ்கின்றார். அசோகவனத்தில் சீதை பிராட்டியாரிடம் அநுமன் கணையாழியைக் கொடுக்கும் பாடல் நம் மனத்தை உருக்குகின்றது.

'' மைத்தகு மாமலர்க் குழலாய்! வைதேகி! விண்ணப்பம்;
ஒத்தபுகழ் வானரக்கோன் உடனிருந்து நினைத்தேட,
அத்தகுசீர யோத்தியர்கோன் அடையாள மிவைமொழிந்தான்,
இத்தகையால் அடையாளம் ஈது அவன் கைம்மோதிரமே ''

நாம் இம்மதிப்புரை எழுதும் நன்னாளாகிய, செவ்வாய் 19-2-1985 ஆன தினம், மாசிமாதம் அமாவாசை. இந்நன்னாளில் இளஞ்செழியனுடைய அமாவாசைப் பாட்டைப் படித்துப் பரவசமடைந்தோம்;

'' அமாவாசை நன்னாளில் ஆஞ்சநேய! நின்மேனி
அழகுமிழும் திருக்கோலம்
அகலாது உளம்பதிந்து.........''

மற்றும், ஆக்கியோன் ஆஞ்சநேயரிடம் சரணாகதியடையும் ஆறு பாடல்கள் வைணவத்தின் உயர் நிலையைக் காட்டுகின்றது.

Dr. G. T. கோபாலகிருஷ்ண நாயுடு.

டிலுள்ள பிரம்மாண்ட ஹனுமான் சிலைகள் இவைகள்தாம் எனப்பெருமையுடன் கூறலாம். இவர்களுக்கு நாடோறும் நித்திய பூஜைகள் உண்டு; வடைமாலை சாற்றுவதால் குறைந்தது கால் மூட்டை உளுந்து வேண்டும் என்பது குறிப்பு.

தவிர மைசூர் மாநிலத்தில் ஹனுமந்தராயன் குடியில் ஹனுமனுக்காக அமைக்கப்பட்ட ஆலயம் ஒன்றுண்டு. விஜயநகர வேந்தர்கள் ஆண்ட ஹம்பியில் லாவண்யம்மிக்க இரு ஹனுமான் சிலைகள் இருக்கின்றன. அழகிலும் அமைப்பிலும் வேலைப்பாடுமிக்க இச்சிற்பங்கள் விஜய நகரக் கலைப் பாணியை பிரதிபலிப்பதாக உள்ளன. இந்த விஜய நகர சாம்ராஜ்யத்தில் ஹனுமந்த சக்கரமே இன்னும் கர்ண பரம்பரையாகப் பூஜிக்கப்பட்டு வருகிறது.

மேலும், சிருங்ககிரி ஜனார்த்தனர் கோயிலில் பஞ்சலோக விக்கிரகத்தாலான பஞ்சமுக ஹனுமார் உள்ளது. தஞ்சை மாவட்டம் ராஜமன்னார்குடி ஸ்ரீ ராஜகோபால ஸ்வாமி திருக்கோயிலில் பஞ்சமுக ஹனுமார் வாகனமுள்ளது; பார்க்க மிக்க அழகாயிருக்கும்.

சுந்தரகாண்டம் ஆதிகாவியத்தில் ஸ்ரீ வால்மீகி முனிவர் இந்த பஞ்சமுக ஹனுமான் உபாசனையைப் பற்றிக் கூறியிருக்கிறார்.

ஸ்ரீ ஆஞ்சநேயன் தனது இதயத்தைப் பிளந்து தாரக மந்திரமான ''ராம நாம''த்தைக் காண்பிக்கும் படத்தை பூஜைஅறையிலோ அல்லது படுக்கை அறையிலோ வைக்கக்கூடாது. இந்த ரூபத்திலுள்ள படங்களைப் பெரும்பாலும் மடங்களிலோ அல்லது கோயில்களிலோதான் வைக்கவேண்டும் என்பது முக்கிய குறிப்பாகும்.

★

# முத்துச் சுடர் மூகாம்பிகை

மூர்த்திகள் மூன்று, பொருள் ஒன்று
— அந்த
மூலப்பொருள் ஒளியின் குன்று
நேர்த்தி திகழும் அந்த ஒளியை—எந்த
நேரமும் போற்று சக்தி என்று.
—மகாகவி பாரதியார்.
*(பாடல்: சக்தி விளக்கம்)*

கர்நாடக மாநிலத்தில் கொல்லூர் கிராமத்தின்கண் ஆதிப்பரம்பொருளாய் அருள் காட்சி வழங்கும் மகாசக்தி அன்னை மூகாம்பிகையின் ஆலயம் இயற்கையின் வனப்புடன் தெய்வீகக் கலையுடன் அமையப்பெற்றுள்ளது. இயற்கை அன்னையின் எழில் வண்ணம் மிளிர பச்சைப் பசேல் என்று தோன்றும் குடகாத்ரி மலைத்தொடர் அன்னையின் கோயிலுக்குச் சிறப்பு சேர்க்கும் ஒரு அம்சமாகும். தவிர, 'சவ்பர்ணிகை' என்ற பெயருடைய புண்ணிய நதிக்கரையில் இந்த ஆலயம் காட்சியளிக்கின்றது.

**அன்னையின் தெய்வீக வடிவமைப்பு**

பேரெழிலுடன் தெய்வீக அருள் வழங்கும் அன்னையின் பஞ்சலோக சிலை ஆதி சங்கரரால் பிரதிஷ்டை செய்யப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. பொன்னிறம் கொண்ட அன்னையின் திருக்கோலம் அமர்ந்த திருக்கோலமாகும். பத்மாசனத்தில் வீற்றிருக்கும் தாய் இரு கைகளில் சங்கும் சக்கரமும் ஏந்திய வண்ணமும் மற்ற இரு கைகளினால் அருளை வழங்கியபடியும் திகழ்வது கண்கொள்ளாக் காட்சியாகும். மிகவும் பிராசீனமான சுயம்பு ஜோதிர்லிங்கம் அன்னையின் முன்புறத்தில் அமையப்பெற்றுள்ளது கோல மகிரிஷி என்னும் பெருந்தவ முனிவருக்காக இங்கு தோன்றிய லிங்கம் ஜோதிர்லிங்கம் என்பர். இந்த லிங்கம் பொன் வண்ண ரேகையினால் கோடிடப்பெற்று இருபாகமாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இது போன்ற அதிசய லிங்கம் பிற கோயில்களில் காண்பதரிது என பெரியோர்கள் கூறுவர்.

கோயிலின்பிரதானவாயில் கிழக்கு நோக்கியுள்ளது. அன்னையின் சன்னதியின் தெற்குப்பக்கத்தில் ஸ்ரீமுருகப் பெருமான் ஆலயமும், வடக்குத் திசையில் சரஸ்வதி மண்டபமும் அமையப் பெற்றுள்ளது. கோயிலின் கண் பிராண லிங்கேஸ்வரர், பார்த்தேஸ்வரர், சந்திர மௌளீஸ்வரர், நஞ்சுண்டேஸ்வரர் மற்றும் பஞ்சமுக கணபதி, ஆஞ்சநேயர், கோபால கிருஷ்ண மூர்த்தி ஆகிய தெய்வீக மூர்த்திகளைத் தரிசனம் கண்டு இன்புற்று மகிழலாம். ஸ்ரீ வீரபத்திர சுவாமியின் அருட்காட்சி குறிப்பிடத்தக்க ஒன்றாகும். அன்னையின் மலர்ப் பாதங்களை கண்டு வணங்கிய அன்பர்கள் வீரபத்திர சுவாமி சன்னதிக்குச் செல்வது வழக்கம்.

தினசரி அதிகாலையில் இருந்து இரவு ஒன்பது மணிவரை அன்னையின் தரிசனம் கிடைக்கிறது. புத்தம் புது புஷ்பங்களாலும் நவரத்தின ஆபரணங்களாலும் அழகு மிளிரும் அன்னையின் கோலம் பக்தி பரவச மூட்டும் தோற்றமாகும்.

காலையில் நடைபெறும் தந்த தாவன பூஜை, காலையில் நடைபெறும் உச்சி கால பூஜை, மாலை ஏழு மணிக்கு மேல் நடைபெறும் பிரதோஷ பூஜை ஆகியவை இந்த ஆலயத்தின் குறிப்பிடத்தக்க பூஜைகளாகும். நவராத்திரி, பங்குனி மாத வசந்த உற்சவம் மற்றும் ஆலயத்தில் நடைபெறும் இதர விசேஷ நிகழ்ச்சிகளின் போது, ஆலயம் விழாக் கோலம் பூண்டிருப்பதை பார்ப்போர் பரவசத்தில் மூழ்குவர் என்றால் அது மிகையாகாது.

"சௌந்தர்ய லஹரி" என்னும் அற்புதமான ஸ்தோத்திரத்தை ஆதி சங்கரர் மூகாம்பிகைமுன்னால்தான் பாடி அருளினார் என்று நம்பப்படுகிறது.

**மூகாம்பிகை என்னும் திருநாமம்**

கம்ஹாசுரன் என்னும் அரக்கன் பரம்பொருளின் சக்தியை தனதாக்கிக்கொள்ள நினைத்து, மூன்று உலகங்களையும் அடிமைப்படுத்தி, தேவர்கள், மக்கள் போன்றோர்க்கும் மற்ற உயிரினங்களுக்குள்ளும் தொல்லைகள் கொடுத்து வந்தான். மேன்மேலும் தன்வலிமையைப் பெருக்கிக்கொள்ள தவம் மேற்கொண்டான். அரக்கனின் கெட்ட எண்ணத்தை அறிந்த மகாசக்தி, அரக்கனின் தவம் ஈடேறி, அவன் வரம் கோரும் தருவாயில் அவனை ஊமையாக்கி விட்டாள்; இதனால் மிகவும் ஆத்திரமடைந்த அரக்கன் தேவர்களுக்கும், ரிஷிகளுக்கும், மக்களுக்கும் அதிக அளவில் தொந்தரவுகள் கொடுக்க ஆரம்பித்ததினால் அன்னை அரக்கனை அழித்து உலகைக் காப்பாற்றினாள். ஊமையானதால் அரக்கன் ஊமை அரக்கன் என்ற பொருளில் மூகாசுரன் என அழைக்கப்பட்டான். மூகாசுரனை அழித்து உலகை ரட்சித்த தன்மையால்இந்தத்தலத்துநாயகிக்கு மூகாம்பிகை என்னும் பெயர் வரக் காரணமாயிற்று.

தனது 'தக்கயாகப் பரணி' யில் ஒட்டக்கூத்தர் "தேவியைப் பாடியது" என்ற தலைப்பில் கீழ்க்கண்டவாறு சக்தியின் பெருமையைக் கூறுகிறார்:—

"தேவியின் மார்பிலே பதக்கம் உள்ளது. பதக்கத்தில் பதிக்கப்பட்டுள்ள ரத்தினக் கற்கள் பேரொளி வாய்ந்தவை; அதன் ஒளி மண்ணுலக பாதாள உலக இருளைப் போக்கும் தன்மை உடைத்தது! தேவியின் செவியில் அலங்காரம் செய்யும் குண்டலங்கள் சந்திரனும் சூரியனும் ஆகும். தேவியின் வயிறு பதினான்கு உலகங்களையும் தன்னகத்தே கொண்டுள்ளதாகும்."

ஆலயத்தை வலம் வந்து அன்னை மூகாம்பிகையை தரிசனம் செய்யும் அன்பர்கள் ஒட்டக்கூத்தரின் கூற்று உண்மை என்பதை அறிந்து, அன்னையின் பெருமையை, ஆலயத்திற்கு வருகை தராத அன்பர்களுக்கும் விளக்குவார்கள் என்பது உறுதி. ○

திரு. வி. ஷியாம் சுந்தர்,
சென்னை-33.

# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில், திருமலை

**தினசரி பூஜைகள், ஸர்வதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை**

சனி, ஞாயிறு, திங்கள் மற்றும் செவ்வாய்க் கிழமைகளில்:

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம் (ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 3-45 வரை : சுத்தி

3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை (அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

4-30 முதல் 4-45 வரை : கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை, (அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ. 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

5-30 முதல் 6-00 வரை : முதல்மணி, பலி, சாத்துமுறை.

6-00 முதல் மதியம் 12-00 வரை : ஸர்வதரிசனம்

மதியம் : 12-00 முதல் 1-00 வரை : சுத்தி, 2வது அர்ச்சனை, (ஏகாந்தம்) 2வது மணி.

1-00 முதல் இரவு 7-00 வரை : ஸர்வதரிசனம்

1-00 முதல் 7-00 வரை: கல்யாணோற்சவங்கள், ஆர்ஜிதபிரம்மோற்சவங்கள், வாகனசேவைகள் ஊஞ்சல்சேவை முதலியன

இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், இரவு மணி

8-00 முதல் 10-00 (இரவு) ஸர்வதரிசனம்

10-00 முதல் 10-30 வரை : சுத்தி,ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.

10-30 இரவு : ஏகாந்த சேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

புதன் கிழமைகளில் (ஸகஸ்ர கலஸாபிஷேகம் நடைபெறுவதால்)

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம் (ரூ 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்);

3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன.

3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை (அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ. 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

4-30 முதல் 4-45 வரை : கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை, (அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ. 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமேஅனுமதிக்கப்படுவர்)

5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை மற்றும் ஸகஸ்ரகலஸாபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்:

6-00 முதல் 8-00 வரை : ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம், சுத்தி, 2வது அர்ச்சனை 2வது மணி.

மதியம் : 1-00 முதல் மாலை 7-00 வரை: ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜிதபிரம்மோற்சவங்கள் வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன

இரவு : 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு, கைங்கர்யங்கள், இரவு மணி முதலியன

8-00 முதல் இரவு 10-00 வரை ஸர்வதரிசனம்.

10-00 முதல் 10-30 வரை : சுத்தி,ஏகாந்தசேவைக்கான ஏற்பாடுகள்.

10-30 இரவு ஏகாந்தசேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

வியாழக்கிழமைகளில் (ஆர்ஜித திருப்பாவாடை நடைபெறுவதால்)

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம் (ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 4-30 வரை : நித்ய கட்டளை கைங்கர்யங்கள் அதாவது சுத்தி, தோமால, அர்ச்சனை முதல்மணி மற்றும் அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.

4-30 முதல் 6-00 வரை : அபிஷேகம்

6-00 முதல் 7-30 வரை : மூலவருக்கு சமர்ப்பணை

7-30 முதல் 9-00 வரை : தோமால சேவை, அர்ச்சனை 2-வதுமணி, பலி,சாத்துமுறை முதலியன

9-00 முதல் இரவு 6-00 வரை : ஸர்வதரிசனம்

மதியம் 1-00 முதல் மாலை 7-00 வரை : ஆர்ஜித கல்யாணோற்சவம், பிரம்மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் மற்றும் மற்றைய ஆர்ஜித சேவைகள்

இரவு7 -00 முதல் இரவு 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், மற்றும் இரவு மணி

8-00 முதல் நடுஇரவு10-00 வரை : ஸர்வதரிசனம்

10-00 முதல் 10-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக்கான ஏற்பாடுகள்.

10-30 இரவு : ஏகாந்தசேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

வெள்ளிக்கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம் (ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)

3-30 முதல் 5-00 வரை : சாலிம்பு, சுத்தி, கைங்கர்யங்கள், காலை மணி, அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்

5-00 முதல் 6-30 வரை : அபிஷேகம்

6-30 முதல் 8-00 வரை : சமர்ப்பணை

8-00 முதல் 9-00 வரை : தோமால சேவை, அர்ச்சனை (தனி)

9-00 முதல் இரவு 7-00 வரை : ஸர்வதரிசனம்

இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கரியங்கள், மணி, முதலியன.

8-00 முதல் இரவு 10-00 வரை ஸர்வதரிசனம்

10-00 முதல் 10-30 வரை : சுத்தி.

10-30 ஏகாந்தசேவை (ஆர்ஜிதம் ரூ. 50/- டிக்கெட்

# வைணவ வினா - விடை

வித்வான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ். தாதாசார்யர்.

ஹரிவம்சம் என்பதன் பெருமை என்ன?

திருமாலின் சிறப்பைச் சிறப்பாக உணர்த்தும் சிறு புராணமாகும். இது ஒரு தனி நூலாக இராமல் மஹாபாரதத்தின் கிலம். அதாவது அனுபந்தமாக விளங்குகிறது. இதில் 16,000 செய்யுள்கள் உள்ளன. இதில் பல கதைகளும், தத்துவம் விளக்கும் விளக்க உரைகளும் உள்ளன. இதுவும் வைசம்பாயனர் என்ற வியாசருடைய சீடர் ஜனமே ஜயனுக்கு உரைத்ததாகும். ஜனமே ஜயன் ஒரு சிறந்த கிருஷ்ண பக்தன். அவன் கிருஷ் வம்சத்தைப் பற்றிக் கூறும்படி கேட்டதற்கிணங்க சைவம்பாயனர் இதைக் கூறினார். இதில் மூன்று பகுதிகள் உள்ளன. முதல் பகுதியில் உலகப்படைப்பு, சூரிய சந்திரவம்சம், துருவன், வேனன், விசுவாமித்திரர் முதலியவர்களின் சரித்திரங்கள், யதுசரித்திரம், கிருஷ்ணாவதாரம், விஷ்ணுபரமான துதிகள் உள்ளன. இரண்டாம் பகுதியான விஷ்ணு பர்வாவில் கிருஷ்ண லீலை, கிருஷ்ணனது அதிதீரச் செயல்கள் பல தைவத்துதிகள் உள்ளன. மூன்றாம் பகுதியான பவிஷ்ய பர்வாவில் இனி வருங்காலம் அதாவது கலியுக தர்மங்கள், பல சரித்திரங்கள் நரசிம்மாவதாரம், வாமனாவதாரங்கள், சிவ, விஷ்ணு சந்திப்பு, ஒருவரை ஒருவர் புகழ்வது, பௌண்ட்ரகன் கதை, சில சில்லரைச் செய்யுட்கள் முதலியன உள்ளன.

பகவத் கீதையின் சிறப்பென்ன?

வானத்திற்குத் திரை இல்லை. கடலுக்குக் கரை இல்லை. மூலப் பரம்பொருளின் பெருமைக்குக் எல்லையில்லை என்பதுபோல் திருக்குறள், ஸ்ரீமத் பகவத் கீதை இவ்விரண்டின் சிறப்புக்கு வரம்பே கிடையாது. இந்த இரண்டு நூல்களும் உலக அரங்கில் மிகவும் புகழ் பெற்று விளங்கும். "கீதம்" பாட்டு என்ற கருத்துடைய சம்ஸ்கிருதச் சொல் எப்பொழுதுமே ஒன்றன்பால்தான். ஆனால் இங்கு "பகவத் கீதா" என்ற சொல் பெண்பாலாக வழங்கப்பட்டுள்ளது. அதனால் அது "ச்ருதி:" அல்லது உபநிஷத் என்ற கருத்தில் வழங்கப்பட்டிருக்கிறது. சிருதி: உபநிஷத் என்ற இரண்டு சொற்களும் பெண்பால் சொற்களாகும். முன்பு திருமகளுக்கு வைகுண்டத்தில் பகவான் தானே தன் செம்பவளச் செவ்வாயால் அருளிய நூலுக்குப் பாஞ்சராத்திரம் எனப் பெயர் ஏற்பட்டு, அதற்கு பகவத் சாஸ்திரம் என்ற சிறப்புப் பெயரும் வழங்கி வரலாயிற்று. இதைப் போல் இந்தக் கீதையும் தேர்த் தட்டில் அருச்சுனனுக்குப் பகவான் கண்ணன் உபதேசித்ததால் இதற்குப் "பகவத் கீதை" எனப் பெயர் ஏற்பட்டது. சம்ஸ்கிருத வேதாந்தத்தில் கூறப்படும், உபநிஷத்-கீதை-பிரம்ம சூத்திரம் என்ற ப்ரஸ்தானத்திரயத்தின் நடுநாயகமாகக் கீதை விளங்கும்.

இந்த கீதை மஹாபாரதம் பீஷ்ம பருவாவில் 25-வது அத்யாயம் முதல் 45-வது அத்தியாயங்கள் வரை உள்ளது. 18 அத்தியாயங்களுடன் 700 செய்யுள்கள் கொண்டவை. மொத்தச் செய்யுள்கள் 650 எனவும் 711 எனவும் சிலர் கூறுவதுண்டு. ஆனால் 700 என்பதுதான் பெருவழக்கு. போர்க்களத்தில் மோஹமுற்றுக் கலங்கி இருக்கும் அருச்சுனனைக் குறித்துப் பகவான் கண்ணன் ஒரு சுருக்கமான அர்த்தத்துடன் எல்லா உபநிஷத்துக்களின் சாரமான கீதையை உபதேசித்தார். இது குருக்ஷேத்திரம் என்ற ஹரியானா மாநிலத்தின் ஒரு பகுதியில் வெளியிடப்பட்டது என்பர். பகவான் அருச்சுனனுக்கு உபதேசித்ததை ஞான திருஷ்டி வரம் பெற்ற சஞ்ஜயன் திருதராஷ்டிரனுக்கு எடுத்து உரைத்ததாக அமைந்திருக்கிறது. கீதையில் ஒரு செய்யுள் படித்தாலும் அவனுக்கு யமனின் யோதனை கிடையாது என ஸ்ரீ ஆதிசங்கர் அருளி உள்ளார். அதிகம் உரை கொண்ட நூலாகுமிது. இதில் ஞானி, விச்ஞானி, சமயத்தவர், நாஸ்திகர், அரசியல்வாதி, நீதி போதனைக்காரர் போன்ற அனைவருக்கும் இடமுண்டு. அவரவர்களின் கருத்தைப் பிரதிபலிப்பதாக இது அமைந்தது இதன் சிறப்பு அம்சங்களில் ஒன்று. கடவுளைப் போல் கீதை நூலையே பூஜையில் வைத்துப் பூஜிப்பதுண்டு. இதற்குப் பல உரைகள் உண்டு என்றாலும் மூன்று மதாசார்யர்களின் பாஷ்யங்களுக்கு ஏற்றம் அதிகம் கூறுவதுண்டு. மகாகவி சுப்பிரமணிய பாரதியாரும் சுருக்கமாக எளிய தமிழ் நடையில் ஒரு குறிப்புரை எழுதியுள்ளார். ஆன்ம விளக்கம், பரம்பொருள் விளக்கம், மாயையின் தன்மை, கடமையின் ஏற்றம், நல்வழி, மனத்திற்குச் செம்மை, இவ்வுலகின் இயல்பு, பரம்பொருளை அடைவதற்கு உள்ள சீரிய வழிகள், சத்வம் ரஜஸ் தமஸ் என்ற முக்குணங்களின் தன்மை, ஜீவனுக்கும் உடலுக்கும் உள்ள தொடர்பு என்பன போன்ற பல கருத்துக்களும், அருச்சுனனுக்குத் தன்

உரையில் நம்பிக்கை ஏற்படக் கண்ணன் தன் விசுவ ரூபத்தைக் காட்டியதும் போன்ற பல அரிய நுணுக்க மான ஆன்மநலக் கருத்துக்கள் இதில் கூறப்பட்டுள் ளன. புறச் சமயத்தவர்களும் மேனாட்டினரும் கூட இந்தக் கீதை நூலை உச்சி மேல் வைத்து மெச்சுவார் கள். "வாரன் ஹேஸ்டிங்ஸ்" என்ற மேனாட்டு ஆட்சித் தலைவர் கீதையின் சிறப்பைக் கூறுகையில் "இங்கிலாந்து ஒரு காலத்தில் இந்தியாவை இழக்க லாம். ஆனால் இந்தியாவில் உதித்த பகவத் கீதை யின் கோட்பாடுகளை இங்கிலாந்து பின்பற்றினால் இங்கிலாந்தென்ன உலகமே மேன்மை பெற்று விளங் கும்" எனக் கூறினார். உரைகாரர்கள் 18 அத்தியாயங் களை ஆறு ஆறாக மூன்று சமமாகப் பிரித்துள்ளார் கள்: அதனால் கீதைக்கு த்ரிஷட்கம் எனவும் பெயர். மோக்ஷம் பெற உபநிஷத்துக்களில் கூறப் பட்ட வழிகளில் முதல் ஆறில் கரும மார்க்கத்தை யும், இரண்டாவது ஆறில் சிறப்பாக பக்தி மார்க் கத்தையும், கடைசியில் ஞானமார்க்கத்தையும் கூறி முடிவில் சரணாகதியின் சிறப்பைக் கண்ணன் வெளி யிடுகிறார் என்பர். 10வது அத்தியாயமான விபூதி யோகத்தையும் 18-வது அத்யாயமான மோக்ஷ சன் யாஸ யோகத்தையும் பற்றிப் புகழ்வதுண்டு. கண் ணன் கோகுலம் பிருந்தாவனம் என்ற இடங்களில் தமது பால்ய லீலைகளைச் செய்து யௌவனத்தில் மதுரா நகரத்தில் பல வீரச் செயல்கள் புரிந்து சற்று முதுமை பெற்றதும் இந்தக் கீதையை அருளினார். அதனால் கண்ணனைக் கீதாசார்யன் எனப் பெருமை யுடன் அழைப்பதுண்டு. இராமன் செய்தபடி நட, கண்ணன் சொன்னபடி நட என்ற பழமொழியில் கூறப்பட்ட "சொன்னது" என்பது கீதையைக் குறிக்கும். காசி, கங்கை, காயத்ரீ, கீதை, கோவிந்தா என்ற 5 பெயரை மட்டும் சொல்லிக் கொண்டிருந்தால் அதுவே "சர்வ மங்களம்" என் பர். வேதாந்த சாஸ்திரங்களான உபநிஷதங்கள் யாவும் பசுக்கள். பால் கறப்பவர் கண்ணன். அர் ஜுனன் கன்றுக்குட்டி. கீதையே பால். இதனைப் பருகுகிறவர்களின் ஆன்மாவும் மனமும் பலம் பெறும் என்றும் கூறுவார்கள். வாழ்க்கையின் முக் கியக் குறி முக்தி. அதற்கு உற்ற நெறிகள் கர்ம, பக்தி, ஞானம். பக்தியின் பழுத்த நிலையான சரணா கதி என்பன. இரு சிறகுகளும் ஒரு வாலும் இருந் தால்தான் பறவை பறக்க முடியும். அவ்விதத்தில் ஞானமும் பக்தியும் சிறகுகள். கர்ம மார்க்கம் சிறகுகளை சமப்படுத்தும் வால். இம் மூன்றின் ரகசியக் குறிப்புகள் கீதையில் விளக் கப்படுகின்றன. பகவத்கீதை இகம் பரம் என்ற இரண்டு இடங்களையும் உரிய முறைகளை ஒழுங்கு படுத்திக் கூறும். மனிதனை நிறை மனிதனுக்குவது கீதையின் குறிக்கோளாகும். உறுதியான உடல், உயர்ந்த தெளிவான உள்ளம், ஆழ்ந்த நிலைத்த அறிவு இவைகளே மனிதனுக்கு இருக்க வேண்டிய கோட்பாடுகளாகும். நிறை நிலையை அடைந்து நிறை மனிதனாக விரும்பும் அனைவர்க்கும் ஸ்ரீமத் பக வத் கீதை பொது நூலாகும். இதனை நம் பாரதத் தின் கர்வப்படும் நூல் எனலாம்; சாஸ்திரம் எனலாம்; வேதம் எனலாம்; ஸ்ம்ருதி நூல் எனலாம். போர்க்காவ்யம் எனலாம்; நீதிநூல் எனலாம்; அருள் தரும் நூல் எனலாம்.

(தொடரும்)

# பஞ்சகோச விவேகம்

ஆத்மா என்பது என்றுமுள்ள பேருணர்வாகும். அதனைத் தெரிந்து கொள்வதால் இப்பிறவிலேயே நிலையான சாந்தியைப் பெறலாம். ஆத்ம ஞானத்தைப் பெற்றவன் ஜீவன் முத்தன். பேரானந்தம், பேரறிவு இவற்றை அளிக்கும் ஆத்ம ஞானத்தைப் பற்றி இக்கட்டுரை பேசுகிறது. நம் உடம்பினுள் காணப்படும் ஐந்து கோசங்களை ஆராய்வதின் மூலம் அவற்றில் மறைந்திருக்கும் மெய்ப்பொருளாகிய ஆத்மா அறியப்படுகிறது. இதுவே பஞ்ச கோச விவேகம் அல்லது ஐந்து உறைகளின் ஆராய்ச்சி.

மனிதனுடைய வாழ்வை ஐந்து நிலைகளாகப் பிரிக்கலாம்:

குழந்தைப் பருவம் :

இது ஒன்று முதல் பத்து வயது வரை. இப்பருவத்தில் உடலில் வளர்ச்சி முன் நிற்கும். உணவு உட்கொள்வதில் வேட்கை மிகுந்து காணப்படும்.

பால பருவம் :

பத்திலிருந்து இருபது வரை.

இப்பருவத்தில் உடல் மிகுந்து செயல்படும். உடலுக்கு வலுவூட்ட பயிற்சியும் மிகுந்து கவனிக்கப்படும்.

வாலிப பருவம் :

இருபதிலிருந்து நாற்பது வயது வரை அறிவுக்கு நிறைய வேலை ஏற்படும் பருவம் இது. விருப்புகளும், வெறுப்புகளும் நிறையச் சேரக்கூடிய பருவமும் இதுதான்.

நடு வயது :

நாற்பதிலிருந்து அறுபது வயது வரை யோகம் அல்லது கடவுளை அறிய வேண்டும் என்கிற அவா மலருகின்ற வயது இது. உண்மையை நாடி தேடி நாட்டம் மிகுவதும் இந்த வயதில்தான்.

முதுமைப் பருவம் :

அறுபதிலிருந்து எண்பது வயது வரை. உள்ளமும், மூளையும், சோர்ந்து தளர்ந்து ஓய்வை விரும்பும் பருவம் இது. அமைதியான நிலையை நாடுகின்ற நேரம் இது.

மேற்சொன்ன ஐந்து நிலைகளும், முறையே ஐந்து வகையான இயல்புகளைப் புலப்படுத்துகின்றன. அவை யாவன:

1. உணவு.
2. பிராணன் அல்லது உயிர்ச் சக்தி.
3. ஆசை.
4. அறிவு.
5. அமைதி.

இந்த ஐந்து இயல்புகளும் ஒவ்வொரு வாழ்க்கை நிலையிலும் காணப்படத்தான் செய்கின்றன, என்றாலும் ஒவ்வொரு நிலையிலும், அதற்கேற்ற இயல்பு தனித்துக் காணப்படுகின்றது. இவ்வாறாக ஒவ்வொரு மனிதனிடத்திலும் அவனுடைய தனித்தன்மை இந்த ஐந்து உறைகளில் வைக்கப்பட்டிருக்கின்றது. இந்த உறைகளே கோசங்கள் என்றும், குணங்கள் என்றும் அழைக்கப்படுகின்றன. அவை முறையே:

1. அன்னமய கோசம் (உணவினால் ஆனது)
2. பிராணமய கோசம் (உயிர் சக்தியால் ஆனது).
3. மனோமய கோசம் (மனத்தால் ஆனது).
4. விஞ்ஞானமய கோசம் (பகுத்தறிவினால் ஆனது).
5. ஆனந்தமய கோசம் (இன்பத்தால் ஆனது). என்று அறியலாம்.

இந்த ஐந்து கோசங்களும், யாவரும், நம்மிடத்திலேயே உணரக்கூடியவைகளாக இருக்கின்றன. மேலும் இந்த ஐந்து கோசங்களும் நாம் விழித்திருக்கும் பொழுது செயல்படுகின்றன. பிராணமய கோசம், மனோமய கோசம், ஆனந்தமய கோசம் இம்மூன்றும் நாம் கனவு காண்கின்ற நிலையில் செயல்படுகின்றன. ஆனால் நாம் கனவு மற்றும் தூங்குகின்ற நிலையில் ஆனந்தமய கோசம் மட்டுமே செயல்படுகின்றது. அன்னமய கோசத்தைவிட பிராணமய கோசம் நுட்பமானது. இவ்வாறு பின்வரும் கோசங்களெல்லாம் முன்னாலிருக்கும் கோசங்களைவிட நுட்பம் மிகுந்து காணப்படுகின்றன. எல்லா கோசங்களிலும் ஆனந்தமய கோசமே அதி நுட்பமானது.

ஒவ்வொரு மனிதனின் இதயத்திலும் வற்றாத ஓர் ஆனந்த ஊற்று அமைந்து கிடக்கிறது; இதுவே 'நான்' அல்லது 'ஆத்மா' எனப்படும். இந்த ஆனந்தம் இரண்டு வகைகளில் தன்னை வெளியிட்டுக்கொள்ள முனைகிறது. ஐந்து கோசங்களின் மூலமாக வெளிப்படும் ஆனந்தமானது எல்லைக்குட்பட்டது; தாரதம்மியமுள்ளது. இவ்வைந்து கோசங்களையும் தாண்டி வெளிப்படும் அதீதமான ஆனந்தம் எல்லையில்லாதது; பூரணமானது; ஒப்பும் உயர்வும் அற்றது.

அன்னமய கோசத்தில் நுகரப்படும் சிற்றின்பம் உடல் நலன் என்பது. பிராணமய கோசத்தில் இது வலிவு அடைகிறது. மனோமய கோசத்தில் மனநிறைவு ஆகிறது. விஞ்ஞானமய கோசத்தில் அறிவு ஆகிறது; ஆனந்தமய கோசத்தில் அமைதி ஆகிறது. ஆனால் ஸமாதி என்ற பூரண நிலையில் வெளிப்படுகின்ற ஆனந்தம் அறிவுக்கு அப்பாற்பட்டது. இதுவே ஆத்மானந்தமாகிறது. இந்த பேரின்பம், தன்னோடு சேர்ந்த பொருள்களுக்கேற்ப பல பெயர்களை

ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சுவாமிகள்
(தமிழாக்கம்: திரு. கோ. ரெங்கராஜ், திண்டுக்கல்.)

# கல்கி அவதாரம் எப்போது? மறுப்பின் மறுப்பு

அண்மையில் ஜனவரி '85 ஸப்தகிரி இதழில் கல்கி அவதாரம் எப் போது? என்பதற்கு மறுப்பு செய்தியாக திரு. பூம்புகார் ஜி. சீனிவாசன் அவர்கள் ஓர் கட்டுரை எழுதி இருந்தார். அதில் கீழ்க்கண்ட அட்ட வணைப்படி யுகங்களின் ஆயுளையும் எழுதி இருந்தார்.

| | | |
|---|---|---|
| கிருதயுகம் | — 17,28,000 | ஆண்டுகள் |
| திரேதாயுகம் | — 12,96,000 | ஆண்டுகள் |
| துவாபரயுகம் | — 8,64,000 | ஆண்டுகள் |
| கலியுகம் | — 4,32,000 | ஆண்டுகள் |

இவை நான்கும் சேர்ந்தது ஒரு சதுரயுகம் என்று அழைக்கப் படும் என்றும், அதாவது ஒரு சதுரயுகத்திற்கு 43,20,000 ஆண்டுகள் என்றும் எழுதியுள்ளார். ஆனால் உண்மையில் ஒரு கல்பத்திற்கு 5,000 ஆண்டுகள் மட்டுமே என்பதற்கு பல ஆதாரங்கள் உள்ளன. அதன்படி,

| | | |
|---|---|---|
| சத்தியுகம் | — 1,250 | ஆண்டுகள் |
| திரேதாயுகம் | — 1,250 | ஆண்டுகள் |
| துவாபரயுகம் | — 1,250 | ஆண்டுகள் |
| கலியுகம் | — 1,250 | ஆண்டுகள் |

தற்சமயம் கலியுகம் முடிவடையும் தருவாயில் உள்ளது. அது சமயம் ஸ்ரீ சங்கர் துணைகொண்டு ஈஸ்வரன் இக்கல்பத்தை அழித்து மறு படி சத்தியுகத்தை சிருஷ்டிப்பார் என்பதற்குப் பல ஆதாரங்கள் உள் ளன; எனவே ஒரு கல்பத்திற்கு இலட்சக்கணக்கான ஆண்டுகள் கிடை யாது. 5,000 ஆண்டுகள் கொண்டதே ஒரு கல்பம் ஆகும். எனவே மக்கள், உலகம் அழிவடைய என்னும் இலட்சக்கணக்கான ஆண்டுகள் உள்ளன என்ற நினைவில் பாபச் சுமைகளை மேலும் மேலும் சேர்த்துக் கொள்ளாமல் அடுத்து வரும் சத்தியுகத்தில் (சொர்க்கம்) இடம்பிடிக்க தங்களைப் புனிதப்படுத்தி தங்களிடம் உள்ள தீய சக்திகளை (காமம், குரோதம், பேராசை, பொறுமை, கோபம்) அழித்து ஞானம், யோகம், தாரணை, சேவை போன்ற அஸ்திர சாஸ்திரங்களை பெற்று எந்த நேர மும் அந்த ஜோதிர்பிந்து சொரூபமான ஈஸ்வரனையே நினைத்திருந்தால் நமக்கும் சத்தியுகத்தில் இடம் கிடைக்கும் என்று நிச்சயம் நம்பலாம். ஒவ்வொரு ஆத்மாவும் 84 ஜன்மங்களை கீழ்க்கண்டபடி ஒவ்வொரு யுகங் களிலும் எடுக்கிறது.

| | | |
|---|---|---|
| சத்தியுகம் | — 8 பிறவிகள் | — 16 அறிவுக்கலை |
| திரேதாயுகம் | — 12 பிறவிகள் | — 14 அறிவுக்கலை |
| துவாபரயுகம் | — 21 பிறவிகள் | — 8 அறிவுக்கலை |
| கலியுகம் | — 43 பிறவிகள் | — '0' அறிவுக்கலை. |

புண்ணிய ஆத்மாக்கள் இந்த 84 பிறவிகளையும் பூர்த்தி செய்யும். பாபங்களை செய்த பாவாத்மாக்கள் தாங்கள் செய்த பாவங்களுக்கேற்ப துவாபரயுகத்திலும், கலியுகத்திலும் மட்டுமே பிறவி எடுத்து தாங்கள் செய்த பாவங்களுக்குறிய தண்டனையை அனுபவிக்கின்றன.

திரு. என். பாலசுந்தரம்-சென்னை-106.

அடைகிறது. ஒரே காற்றானது, தென்றல் என்றும், காற்று என்றும், வாடை என்றும், புயல் என்றும், சுழிக் காற்று என்றும் அந்த அந்தச் சூழ்நிலைக்குத் தகுந்தபடி எப்படி பெயர் பெறுகிறதோ அப்படித்தான் அகண்டமான ஒரே பேரின்பம் பல பல பெயர்களை அடைகிறது.

இதனால், கண்டமான சிற்றின்பங் களில் ஒவ்வொன்றும் எண்ணற்ற வகைகளில் உணரப்படுகின்றது. இந்த ஒவ்வொரு வகையும் எண் ணற்ற முறைகளில் அதனுடைய தரத்திலும், அழுத்தத்திலும் வேறு படுகிறது. கண்டமான இன்பத்தை விரும்புகின்றவர்கள் காம்ய கர்மாக் கள் அதாவது இச்சை நிறைவேறு வதற்குரிய செயல்களைச் செய்கிறார் கள். வேதங்களிலே கூட இவ்வகை யான செயல்முறைகள் நிறையச் சொல்லப்பட்டிருக்கின்றன.

பல்வேறு தரப்பட்ட மனிதர்களுக் காக இவைச் சொல்லப்பட்டிருக்கின் றன. ஆனால் வேதத்தின் இறுதியான வேதாந்தமோ எல்லையற்ற பேரின் பத்தை அடைவதற்கு வழிகளைச் சொல்லுகின்றது. எந்த ஒரு மெய்ப் பொருளிலிருந்து மனிதன் வந்தானோ எதனிடத்தில் லயித்து ஒன்றி அவன் மரணமில்லாப் பெரு வாழ்வு அடை வானோ அந்த மெய்ப்பொருளை மனி தன் திரும்ப அடைய வேண்டும். அகண்டமான பெரும் பேறு ஐந்து கோசங்களையும் பக்குவப்படுத்தி நிறைவு பெறுவதாலேயே அடைய முடியும். இத்தகைய தன்னிறைவு இவ்வுலக வாழ்க்கையிலேதான் சாத் தியமாகும். இதற்காக பல பிறவி கள் தேவைப்படும். சமம், தமம், உபாதி என்ற பல பயிற்சிகள்மூலம் தான் அன்னமயம் முதலிய கோசங் களை நாம் பக்குவப்படுத்த முடியும். இந்த பயிற்சியின் பயனாக ஸமாதான மும், ஸமாதியும் கூடும். இங்கு ஸமாதி எனப்படுவது ஐந்து கோசங் களின்றும் ஆத்மாவைப் பிரிந்து அறிந்து உணர்ந்து, தானே அம் மெய்பொருளாக நிற்பதேயாகும்.

o

★ கீதை

யத்ய தாசரதி ச்ரேஷ்டஸ் தத் ததே
வேத ரோஜந! |
ஸ யத் பிரமாணம் குருதே லோகஸ்
ததநுவர்த்ததே ||

தெய்வாஸுர ஸம்பத் விபாக யோகம்

அத்தியாயம்—16.

பகுதி—5.

நம்மிடம் இருக்கக் கூடாத அசுர குணங்களைப் வரிசைப் படுத்திக் கூறுகிறார்.

தர்ப்ப : இறுமாப்பு

இது பணிவுக்கு எதிரிடை குணமாகும். "எல்லார்க்கும் நன்றும் பணிதல்' என்றார் வள்ளுவர். இறுமாப்பு பலரிடம் பலவிதங்களில் தலை தூக்கும். கல்வியால், அழகால், அறிவால், பணத்தால், பதவியால் ஒருவன் இறுமாப்பு அடைய வாய்ப்புண்டு. 'நான் ஒரு சீரிய பக்தன்' 'பக்தியில் எனக்கு நிகராக எவர் உண்டு' என்று எண்ணுவதும் ஒரு வகை இறுமாப்பே. இறுமாப்புடையவன் பிறர் மகிழ்ச்சியாக இருப்பதை ஒரு போதும் விரும்ப மாட்டான். தனக்கு ஒரு கண் போனால் பிறருக்கு இரண்டு கண்களும் போக வேண்டும் என்று இத்தகையவன் விரும்புவான். பிறரது துன்பத்தில் இவன் இன்பம் காண்பான். இவர்கள் அரக்க பரம்பரையாவர்.

அபிமான: தற்பெருமை

நாம் செய்யும் சிறந்த செயல்களைப் பிறர் பாராட்டுகின்ற அளவே அவை ஏற்றம் மிகுந்தவையாகக் கருதப்படும். ஆனால் சிலர் தங்களைப் பற்றித் தாங்களே மிகவும் பெருமையாகப் பேசி அலைவர். இத்தகையவர்களிடம் என்னதான் பெருமை இருந்தாலும் அவர்களிடம் காணப்படும் தற்பெருமையால் அது சோபிக்க மாட்டாது. மாறாக மகான்கள் தங்களிடம் எத்துணைதான் மகத்துவம் இருந்தாலும் அது பற்றிச் சிறிதும் பேசவே மாட்டார்கள். பிறர் அதை அநுசரிக்கும் கர்அவர்களிடம் சுட்டிக்காட்டுகள் அநுசரிக் 'எல்லாம் இறைவன் செயல்' த்தனர். அடக்கமாகப் பதில் கூறுவார்கள். பிர குருவின் அருள் காரணமாக உலகெங்கிலுமிருந்து வந்திருந்த பக்தர்கள் தாங்கள் அனுபவித்த பல்வேறு சித்திகளைப் பற்றிக் குருதேவர் ஸ்ரீசுவாமி சிவானந்தரிடம் தெரிவித்த பொழுது அவர் அதுபற்றி ஒரே வரியில் 'அப்படியா, எல்லாம் இறைவனருள்' என்று கூறியது அடக்கத்திற்கு ஒரு எடுத்துக்காட்டு ஆகும். தற்பெருமை அற்றவர்கள் தெய்வாம்சம் பொருந்தியவர்கள்.

பாருஷ்யம் :

கடும் சொல் மற்றும் கண்டவரிடமெல்லாம் சீறி விழுதல் பாருஷ்யம் ஆகிறது. தன் காரியம் ஈடேறுவதற்காகப் பிறரை இந்திரன், சந்திரன், கர்ணன், குபேரன் என்றெல்லாம் வஞ்சப் புகழ்ச்சியாகப் பேசுவதும் இதன்பால்படும். இத்தகையோர் உள்ளொன்று வைத்துப் புறம் பொன்று பேசும் குற்றத்தைச் செய்தவர்களாகிறார்கள்; இதுவும் நாம் தவிர்க்க வேண்டிய ஒரு கீழ்க்குணமாகும்.

க்ரோத :

சினம் ஒரு அசுர குணமாகும். சினத்தால் சீரழிந்தவர் எத்தனையோ பேர்; பல வருடங்களாகச் சேர்த்த தபோபலன் ஒரே நொடிப்பொழுதில் தோன்றிய சினத்தால் அழிந்ததாகப் புராணக் கதைகள் பல உண்டு. சினம் மனிதனின் புத்தியைச் சிதறடித்துச் சீரழிக்கிறது. சாதனையின் முதற்படி சினத்தை அடக்குதலேயாகும். சினத்தால் பல்வேறு வியாதிகள் நம் உடலில் ஏற்படுகின்றன; சினத்தை முதலில் அடக்கி, பின்னர் அகற்றி வாழ்ந்தால் மன

பொருள் விளக்கம் அருளினார். மேலையார் செய்வனகள் கேட்டியேல் என்றதே வேண்டுவன கேட்டியேல் என்று ஒரு சொல்லைக் கூட்டி அருளிய ஆண்டாளின் திருவுள்ளக் கருத்து நெஞ்சில் நடையாடியதால் இங்ஙனம் அருளிச் செய்தார் என்பர். 'ஆசார ப்ரபவோ தர்ம: தர் மஞ்ஞுஸமய: பிரமாணம் வேதா: ச' அஎன்றன்றோ ஸ்மிருதிகளும் கூறுவது.

தன் ...த விவரணம் முதலியன: பது, தனது ...டுன்னை விழுங்குவன் உணராதிருப்பது அ... காணிலென்று தக்கது இன்னது, தகாதது ...ன்னில் என்பதை அறியாதவன் அ...தான் யாவான்; இது நன்மை தரும், இது தீமை தரும் என்பதை அறியாதவன் அவிவேகி. கையில் கிடைத்ததை எல்லாம் எடுத்து வாயில் வைத்துக் கொள்கிறதே பச்சைக் குழந்தை அது அறியாமைக்கு எடுத்துக்காட்டு. அதைப் பொறுத்தமட்டில் அல்வாவும், மலமும் ஒன்றுதான். கள்,

திரு. டி. கே. நாராயணன்,
M.S.c., M.Phil.,
ஆசிரியர் "சமயஜோதி" மதுரை.

சாராயம் முதலியவை உடலையும் உள்ளத்தையும் ஒருங்கே கெடுத்து, குடியையும் கெடுத்து ஒருவனைப் படுகுழியில் வீழ்த்தும் என்பதைத் தெரிந்தும் திரும்பத் திரும்ப அதன் பிடியில் உட்பட்டுத் தவிப்பவர்கள் அவிவேகிகள் தானே! சிகரெட் புகைத்தல் புற்று நோய்க்கு வழி வகுக்கும் என்று உலகோர் அனைவரும் அறிந்த உண்மையை உணர்ந்த பின்னரும் பாக்கெட், பாக்கெட்டாக புகைத்துப் புற்று நோய்க்கு இரையாகி மடியும் மாந்தர்கள் பலர் அவிவேகிகள் தானே! பொன்னும் பொருளும் அளவுக்கு மீறினால் ஆபத்துக்கள் பலவற்றைத் தங்களுடனேயே அழைத்து வரும் என்பதை உணர்ந்தும் அதிகமதிகம் பொருளைச் சேர்ப்பதில் வாழ்நாளை எல்லாம் கழிக்கும் மாந்தர்கள் அக்ஞானிகள் தானே!

மேலே சொல்லப்பட்ட ஆறு குணங்களும் அசுர ஸம்பத்துக்களாகும்; இவை மோட்சப் பாதையில் உள்ள மாபெரும் இடையூறுகளாகும்.

'பார்த்தா' என்று இங்கே பகவான் அர்ஜுனனை அழைக்கிறார். எதற்காக? சான்றோர் குலத்தில் உதித்த உன்னிடம் இத்தகைய கீழான குணங்கள் இல்லை. எனவே நீ உயர்நிலையை அடையத் தகுதியானவன் என்பதை இந்தச் சொல் மூலம் பகவான் எடுத்துக் காட்டுகிறார்.

அசுர இயல்புள்ளவர்கள் எதிலுமே நம்பிக்கை கொள்ள மாட்டார்கள். எதைச் சொன்னாலும் அதைமறுத்துப் பேசுவர். வீண் தர்க்கத்தில் அவர்கள் இன்பம் காண்பர். இறைவனையும், இறை நம்பிக்கை உடையவர்களையும் அவர்கள் பழிப்பர். உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவது அவர்களுக்குக் கைவந்த கலை; புறக்கண்ணால் காண்பதே மெய் என்பது அவர்களது கொள்கை. மறுபிறப்பில் அவர்களுக்கு நம்பிக்கை கிடையாது. உண்டு களித்துக் கூத்தாடுவதுவே அவர்களது வாழ்க்கையின் இலட்சியம். நல்லது அனைத்திற்கும் அவர்கள் இடையூறு செய்வர். இன்று நம்மிடையே இத்தகைய அசுர இயல்புடைய மக்கள் அநேகர் உளர். இவர்களெல்லாம் பண்டைய அரக்கர்களின் மறுபிறவிகளே யாவர். கம்ஸன், ஹிரண்யன், இராவணன் போன்றோர் அன்றைய அசுரர்கள். பட்டங்கள் பல பெற்றும், இறை நம்பிக்கையற்று, பிறருக்குத் தீங்கு செய்வதில் இன்பம் காணும் மனிதர்கள் இன்றைய அசுரர்கள் ஆவர்.

நல்லதிற்கும், தீயதிற்கும் இடையே நமக்குள்ளேயே யாண்டும் நிகழ்ந்து கொண்டிருக்கும் சண்டையை தேவாசுரப் போர் என்று புராணங்களில் வர்ணிக்கப்படுகிறது.

இயல்பு வேறுபட்டால் என்ன பலன் கிட்டும் என்பதற்கு அடுத்த சுலோகத்தில் விடை கிட்டுகிறது.

தைவீ ஸம்பத் விமோக்ஷாய
நிபந்தாயாஸுரீ மதா |
மா சுச: ஸம்பதம் தைவீம்
அபிஜாதோஸி பாண்டவ || (16-5)

'தெய்வ ஸம்பத்து மோட்சம் தருவதென்றும், அசுர சம்பத்து பந்தப் படுவதென்றும் கருதப்படுகிறது. பாண்டவா? வருந்தாதே, நீ தெய்வ ஸம்பத்துடன் கூடப் பிறந்துள்ளாய்'

தெய்வ ஸம்பத்து மற்றும் அஸுர ஸம்பத்து பற்றி பகவான் இவ்வளவு விளக்கமாகக் கூறியதும் அர்ஜுனனது மனதில் 'என்னிடம் இவற்றில் எந்த இயல்பு குடி கொண்டு உள்ளதோ?' என்ற ஐயம் எழுவதற்கு வாய்ப்புண்டு. அனைத்தையும் அறிந்த பகவான் அதைத் தெரிந்து கொண்டு, 'அர்ஜுனா! நீ தெய்வ ஸம்பத்துடன் கூடப் பிறந்துள்ளாய். எனவே மேல் நிலையாம் முக்தி நிலை நிச்சயம் கிட்டும். வீணாகக் கவலைப் படாதே' என்று தேற்றுகிறார்.

சீடனின் மனதில் நிலவுவதை அவன் வாய்விட்டுச் சொல்லாமலேயே உணர்ந்து கொள்வதுதான் நல்லாசிரியனின் தன்மையாகும். பகவான் இலட்சிய ஆசிரியர் என்பதை இந்த இடத்தில் நிரூபிக்கிறார். குருவின் முன்னர் சென்றதுமே ஞான குருவிற்கு சீடனைப் பற்றியது அனைத்தும் தெரிய வருகிறது. இமயஜோதி ஸ்ரீசுவாமி சிவானந்தர் சான்னித்தியத்தில் இத்தகைய அற்புதங்கள் ஏராளம் நிகழ்ந்திருக்கின்றன.

நமது முந்தைய ஜன்ம வினைச் செயல்கள் நமது இந்த ஜன்மத்தை நிர்ணயிக்கிறது என்ற உண்மையையும் பகவான் இந்த சுலோகத்தில் எடுத்துக் காட்டுகிறார்.

ஜீவர்களுடைய இயல்புகளை எப்படி வகைப்படுத்துவது என்பதுபற்றி பகவான் அடுத்த சுலோகத்தில் விளக்குகிறார்.

(தொடரும்)

## திருப்பதியில் தங்கு வசதி காட்டேஜுகளின் கட்டண விவரங்கள் (நாள் ஒன்றிற்கு)

**ஸ்ரீவேங்கடேஸ்வரா தர்ம சத்திரம் :**

| | |
|---|---|
| இரண்டு படுக்கைகளைக் கொண்டு மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை: | ரூ. 20-00 |
| நான்கு படுக்கைகளைக் கொண்டு மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை: | ரூ. 25-00 |
| ஒரு படுக்கையும், மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை: | ரூ. 15-00 |

**ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி :**

| | |
|---|---|
| இரண்டு படுக்கைகளையும், குளிர்ச்சாதனம், மேசைநாற்காலி வசதிகளைக் கொண்ட அறை. | ரூ: 50-00 |
| ஒரு படுக்கையும் குளிர்ச்சாதனம் மற்றும் மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை: | ரூ. 30-00 |

**ஸ்ரீ வேங்கடேஸ்வரா விருந்தினர் விடுதி :**

| | |
|---|---|
| இரண்டு படுக்கைகளைக் கொண்டு மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை: | ரூ. 20-00 |

8-ம் பக்கத் தொடர்ச்சி

ஆகையினால் இவை தனிப்பட்ட வேதமே.

கமப்யாத்யம் குரும் வந்தே
கமலா கிருஹமேதினம் ।
பிரவக்தாச் சந்தஸாம் வக்தா
பாஞ்சராத்ரஸ்ய ய: ஸ்வயம் ॥

பாஞ்சராத்ர சாஸ்திரத்தைத் தானே கூறினான். வேதத்தைப் பரப்பினான். அவனைப் போல வேதமும் அநாதி. வேதம் அநாதி என்று சொல்லும்பொழுது வடமொழி வேதங்களைப் போல தமிழ் வேதங்களும் அநாதியாம். வடமொழி வேதம் அநாதியெனின் 'விஸ்வாமித்ரஸ்ய ஸூக்தம் பவதி' என்று தோற்றுவாய் தோன்றுகிறதே. அநாதி சப்தம் பொருந்துமோ என்பார்க்கு அவர் கண்டறிந்து உபகரித்தமையால் அவர் பக்கல் உபகார ஸ்மிருதியாலே (கடப்பாட்டு உணர்ச்சியாலே) அங்ஙனம் கூறினர் என்பர். ஆகவே ஆழ்வார்கள் இயற்றியதாகக் கூறும் அதே விளக்கம் இங்கும் அமையும். வேதம் தமிழ் செய்தமைக்கு சான்றுகள் சில கூறுவாம். 'கண்ணாவான் மண்ணோர் விண்ணோர்க்கு' என்ற பகுதி "சக்ஷுர்வை தேவானாம் உத மர்த்யானாம்" என்ற வேதத் தொடர்க்கு நன்மொழி பெயர்ப்பு போலே அமைந்துளது. "அவனே அவனும் அவனும் அவனும்। அவனே மற்று எல்லாமுமறிந்தனமே' என்ற தொடர் 'ஸ பிரும்மா ஸ சிவ: ஸ இந்த்ர: ஸோக்ஷர: பரம: ஸ்வராட்' என்பதோடொக்கும். வேதம் ஸ: என்றதை ஆழ்வார் அவன் என்றே கூறுதல் காண்க. ஒத்துப் பேசும் இடங்கள் கண்டோம்.

**வேதப் பொருள் காண அருளிச் செயலே கைவிளக்கு:**

"மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்" இங்கு செய்வனகள் என்ற சொல்லொன்றே போதுமாயிருக்க வேண்டுவன என்றதன் குறிப்பு காண்மின்.

யத்ய தாசரதி ச்ரேஷ்டஸ் தத் ததே
வேத ரோஜந: ।
ஸ யத் பிரமாணம் குருதே லோகஸ்
ததநுவர்த்ததே ॥

பெரியோர்கள் அநுசரிக்கும் கர்மங்களையே மற்றவர்கள் அநுசரிக்கிறார்கள் என்று நிர்வகித்தனர். உத்தரார்த்தத்தில் எதை பிரமாணமாகக் கொள்கிறார்களோ அதனையே உலகத்தார் பிரமாணமாகக் கொள்வர் என்ற சாமான்ய பொருளையே பணித்தனர்; ஆனால் திருப்பாவைச் சீயரான ஸ்வாமி எம்பெருமானார், "யத்பிரமாணம்" என்ற சொல்லை ஒரே சொல்லாகக் கொண்டு எந்த அளவுக்கு அந்த கர்மாக்களை அநுஷ்டிப்பார்களோ அந்த அளவிற்கே மற்றையோர் அநுட்டிப்பர் என்று திருப்பாவையை அநுசரித்து பொருள் விளக்கம் அருளினார்: மேலையார் செய்வனகள் கேட்டியேல் என்னாதே வேண்டுவன கேட்டியேல் என்று ஒரு சொல்லைக் கூட்டி அருளிய ஆண்டாளின் திருவுள்ளக் கருத்து நெஞ்சில் நடையாடியதால் இங்ஙனம் அருளிச் செய்தார் என்பர். 'ஆசார ப்ரபவோ தர்ம: தர்மஞ்ஞஸமய: பிரமாணம் வேதா: ச' என்றன்றோ ஸ்மிருதிகளும் கூறுவது.

**ஸாது சப்த விவரணம் முதலியன:**

வாரிக் கொண்டுன்னை விழுங்குவன்
காணிலென்று
ஆர்வுற்ற என்னை ஒழிய என்னில்
முன்னம் பாரித்துத்தான்
என்னை முற்றப் பருகினான் காட்கரை
யப்பன் கடியனே

இதனால் சேதனனைப் பெறுவதில் எம்பெருமானது பாரிப்பு நன்கு விளங்கும்: இப்படி மிக வருந்தி

## வாஞ்சையுள்ள கண்ணன் வணங்கு

**கவிஞர் வி. மு. உலகநாதன்—சென்னை**

விண்ணோர் தலைவனென வேண்டிப் பதிக்கின்ற
வண்ணனே வேங்கடத்தில் வாழ்பவனே—மண்ணுலகில்
மாந்தர் அவன்புகழை வாயாரப் பாட்டிசைத்தால்
சாந்திபெறச் செய்விப்பான் சார்ந்து!

எல்லாச்செல் வங்கள் இனிதருளும் மாயவனைச்
சொல்லிப் புலவோர் துதிக்காமல்—பொல்லாங்கு
செய்து பொருள்குவிக்கும் தீயவரைப் பாடுகின்றார்
பொய்மயக்கம் போக்கிடுவான் போந்து!

ஏழு நிறமானான் ஏழு கடல்கடைந்தான்
ஏழு மரம்துளைத்தான் எம்பெருமான் —ஏழுமலை
மேல்நின்றான் ராக்கதரை வீழ்த்தி அறங்காத்தான்
மால் அவன்தன் பேர்பாடி வாழ்த்து!

குன்றெடுத்தான் ஆக்கள் குறைதவிர்த்தான் கோவலர்தம்
அன்புக் குடியில் அவதரித்தான்—துன்புற்ற
பாஞ்சாலிக் காதரவாய்ப் பாரதப் போர்முடித்தான்
வாஞ்சையுள்ள கண்ணன் வணங்கு!

சங்கொடு சக்கரம் தானேந்திப் பேரொளியால்
புங்கயக் கண்ணன் பயன்விளைத்தான்—இங்கிதமாய்
வேங்கடத்தில் நின்றே விழைவார்க் கருள்சுரந்து
தாங்கிடுவான் பொன்னடியைச் சாற்று!

படாதனபட்டு தான் பெற்ற முக்த ஆத்மாவை இவ்வுலகத்திற்கு அவன் திருப்பி அனுப்புவதில்லை. வேதமும் ப்ரும்ம சூத்ரமும் ''ந ச புனர் ஆவர்த்ததே-ந ச புனர் ஆவர்த்ததே'' என்றும், 'அநாவிருத்தி: சப்தாக, அநாவிருத்தி: சப்தாத்' என்றும் கூறிப் போந்தன. ஆழ்வாரும் 'இத்திசைக்கென்றும் பிணைகொடுக்கிலும் போகவொட்டாரே' என்று சுவைபட இங்கு அருளியுள்ளார். இங்கு உரை எழுத வந்த பாஷ்யகாரர் न च परम पुरुष: सत्यसंकल्प: अत्यर्थप्रियं ज्ञानिनं लब्ध्वा कदाचिदावर्तयिष्यति என்று உரை வகுத்ததற்கு பெரியாழ்வார் திருவாக்கே மூலமாகும்.

2. साधुपरित्राणं இங்கு साधु சப்தத்திற்கு விவக்ஷிதா தொழுங் காதல் உடையவர்களே! கஜேந்திர ஆழ்வானை ஸுதர்ஸன ஆழ்வானைக் கொண்டும் ஸங்கல்ப ஞானத்தைக் கொண்டும் परित्राणं ஏன் செய்திலீர் என்ற கேள்விக்கு எம்பெருமானது ரகஸ்ய உத்தரம் மிக ரஸ்யமாம். மழுங்காத ஞானமே படையாக மலருலகில் தொழும்பாயார்க்கு அளித்தால் உனது புகழுக்கிழுக்காம். ஸங்கல்ப ஞானத்தால் गजेन्द्र: परित्रातो भवतु साधव: परित्रातो भवतु என நீ சங்கல்பத்திடலாம். ஆனால் உனது சுடர்ச்சோதிக்கு அது இழுக்கு. கருதுமிடம் பொருதும் உன் கை நின்ற சக்கரமான சுதர்ஸனாழ்வானைக் கொண்டு செய்திடினும் அது இழுக்காம். மழுங்காத்வைந்நுதிய சக்கர நல்வலத்தையாய் வடிவார் சோதி வலத்துறையும் சுடராழி கொண்டு செய்ய நீ வல்லை—ஜலந்தராசுரனை போரில் பொருதுவென்று மீண்டானில்லையா? ஏன் செய்யவில்லை இங்கு. நமக்கு வருகின்ற ஐயம் ஆழ்வாருக்கும் வந்துளது. ஏன் என்ற ஐயத்திற்கு எம்பெருமான் கஜேந்த்ர ஆழ்வானது கதையினை சுட்டிக் காட்டுகின்றான். ஆழ்வாரே! கஜேந்த்ர ஆழ்வானை ஸங்கல்ப ஞானத்தால் காக்ககில்லேன். ஆழி கொண்டும் அவனிடர் களைய இல்லேன். அவன் தொழுங்காதலுடைய साधु காண். இருந்த இடத்திலிருந்து ஸங்கல்பிக்கலாம். ஆழிதனை ஏவலாம். அது தன்னை அங்கு வந்துதான் ஏவ நிர்பந்தமில்லை அவனது ஆர்த்தியை நீர் காணீர்— ''நாஹம் கலே பரஸ்யாஸ்யத் ராஞார்த்தம் மதுசூதனு கரஸ்த கமலான் யேவ பாதயோ: அர்ப்பிதும் தவ'' இப்பொழுதும் உடல் போகிறதே என்று நான் கரைகின்றேனல்லேன். செவ்வி மாறாத இந்தப் பூவை உன்னுடைய திருவடிகளில் பரிமாற இல்லாது போயிற்றே என்று வருந்திய எனது ஆர்த்தியை நீ அறிந்தபடி என்னே? உள்ளுவார் உள்ளிற்றெல்லாம் உடனிருந்தறியும் பரம புருஷா! நேரில் எழுந்தருளனையே! உன்னுடைய सर्वज्ञत्वயும் கருணையும் என்னே! என்னே! என்று உள்ளம் உருகி நின்றான். இப்பொழுது அறிவீர். साधुपरित्राणं ஸங்கல்ப ஸாத்யமாகாது சுதர்ஸன ஆழ்வானை ஏவல் கொண்டும் ஆகாது என்பதை प्रत्यक्षेण साधव: 'குட்டத்துக் கோள் முதலை குறித்தெறிந்த சக்கரத்தன்' என்பதால் அறியலாம். குறித்தெறிந்த என்ற இச்சொல்லழகு அனுபவித்தற்குரியது. கிடந்த நாள் கிடந்தாய் எத்தனை காலம் கிடத்தி உன் திருவுடம்பசைய தொடர்ந்து குற்றேவல் செய்து தொண்டரோர்க்கருளிச் சோதி வாய் திறந்து உன் திருக்கண்களால் நோக்காய் என்று இப்புடைகளிலே நேரில் கண்டு அளவளாளப் பாரிப்போர்க்கு நேரில் வாரா தொழிவதெங்ஙனம். ஆகையினால் அவதாரப் ப்ரயோஜனம் साधुपरित्राणமே துஷ்ட நிக்ரஹம் அன்று. துஷ்ட நிக்ரஹம் ஆனுஷங்கிகம் ஆம் என பாஷ்யமிட்டார் எம்பெருமானார்.

**அருளிச் செயலில் அர்ச்சை எம்பெருமானின் ஈடுபாடு:**

அருளிச் செயலின் இனிமைதனில் ஈடுபட்டு நம்பிள்ளையின் உரை கேட்க அர்ச்சா சமாதி கடந்து வந்த பெருமானை திருவிளக்குப் பிச்சன் திருத்திய வரலாறும் ''பைந்தமிழின் பின் சென்ற பச்சை பசும் கொண்டலே'' என்று மதாந்தரஸ்தர்களும் வியந்து பேச இருக்கும்படி கணிகண்ணனிடம் ஈடுபட்டு பாய்சுருட்டிக் கொண்டதும், பாய்படுத்துக் கொண்ட வரலாறும், குடந்தையில் எழுந்திருந்து பேசி வாழிகேசனே என்று மழிசையாரால் போற்றப்பட்ட வரலாறும், அருளிச் செயலோதும் அடியாருடைய எச்சில் வாயில் ஊர விரும்பிய சாளக்ராம மூர்த்தியின் வரலாறும் அர்ச்சை எம்பெருமான்கள் அருளிச் செயலில் ஈடுபட்டதற்கு ஒரு சில சான்றுகளாகும்.

**ஆத்மாவின் அந்தரங்க நிரூபகம்:**

எம்பெருமானார் காலக்ஷேப கோஷ்டியில் ஆத்மாவுக்கு ஞானம், ஆனந்தம், சேஷத்வம் ஆகியவை குணங்களாயிருக்க இவைதம்முள் அந்தரங்க நிரூபகம் எது என்பதை நிரூபிக்க ஆழ்வார் திருவாக்கையே தஞ்சமாகக் கொண்டார். 8-8-2ல் அடியேனுள்ளான் உடலுள்ளான் என்ற பாசுரத்தில் காட்டப்படும் ஐதிஹ்யம் காண்க. இப்பாட்டிற்கு முன் பாட்டு 'ஒருவன் அடியேனுள்ளானே' என்று முடிகிறது. அடியேன் செய்யும் விண்ணப்பமே போன்ற சில இடங்களிலும் அடியேன் என்ற சொல் வந்துள்ளது. அடியேன் சிறிய ஞானத்தன் என்ற இடத்திலும் தேக விசிஷ்டமான ஆத்மாவாலேயே ஆற்ற முடியும். அடியேனுள்ளான் உடலுள்ளான் என்ற ஓர் இடத்தில் மட்டும் சொரூபம் நேரே பேசப்பட்டுள்ளது. உடல் என்ற சொல்லால் தேகத்தைக் கூறி அடியேன் என்ற சொல்லால் ஆத்மாவைக் கூறிற்று உடலுள்ளான் என்பதால் எம்பெருமான் தேக விசிஷ்டன் என்றது அடியேனுள்ளான் என்றதால் ஆத்ம விசிஷ்டம் என்கிறது. ஆத்மாவை அடியேன் என்று கூறினமை காண்க. அதாவது எம்பெருமான் ஜடப்பொரு

ளான தேகத்தை அனுப்ரவேசித்திருப்பவன் என்றும் கூறிற்று. உடலுள்ளான்=தேக விசிஷ்டன், அடியேனுள்ளான்=ஆத்ம விசிஷ்டன். ஆத்மா அகம் அர்த்த மாகையாலே என்னுள்ளான் என்று கூறினுலும் பொருந்தும். அப்பொழுதும் எம்பெருமான் ஜீவாத்ம விசிஷ்டன் என்பதும் தேறும். அடியேன் என்று ஆத்மாவை அருளிச் செய்திருக்கும் அழகு நெஞ்சால் நினைப்பரிதால் (அடியான்=ஆத்மா) ஆத்மா என்பதும் அடியேன் என்பதும் ஒரு பொருட் சொற்கள் ஆத்மாவை அடியேன் என்ற சொல்லாலே பேசியதால் ஆத்மாவினுடைய தொல்லடிமைச் சொரூபம் வழிவழி வரும் ஒன்று என்று வெளியிட்டார். இதனுல் ஆத்மாவுக்கு அடியான் என்ற நிர்ணயிக்கப் பெற்ருேம்.

**நாலாயிரம் வகையும் தொகையும்:**

நாதமுனிகள் யோகத்தில் ஸாக்ஷாத்கரித்து இப்பனுவல்களை திருவாய் மொழி, திருமொழி, முதலாயிரம், இயற்பா என நான்கு பெரும் பிரிவாக்கினர். இது நாதனுக்கு நாலாயிரம் உரைத்திட்டான் வாழியே என்ற வாழித் திருநாமத்திலும், குருபரம்பரைகளிலும் தெளிவாம். இவற்றுடன் பிரபன்ன சாவித்ரி என்ற இராமானுஜ நூற்றந்தாதியும் சேர்த்து அநுஸந்திப்பர். ஆக அருளிச் செயல் அனைத்துக்குமே நம்மாழ்வாரே பிரவர்த்தகர். ஆக இருபத்தைந்து பிரபந்தங்களும் வைணவர்கள் தங்கள் நல்வாழ்வு என்று உகந்து போற்றி இருப்பர்.

**முடிவுரை:**

ஆழ்வார்கள் பனுவல் தொகுப்பு திவ்ய பிரபந்தம் என்று ஏற்ற பெற்றி வழங்கப்படும் என்றும், இவற்றிற்கு உகந்தருளின நிலங்களில் நோக்கு என்றும், அர்ச்சாவதாரத்திற்கமைந்த பிரமாண நூலென்றும், அர்ச்சை எம்பெருமான்களும் அருளிச் செயலில் ஈடுபட்டார்களென்றும், இது வேதம் போல் அநாதி என்றும், கலந்து பேசாது ஸாத்விக அதிகாரிகளுக்கே உரியனவே கூறுவதென்றும், இது கொண்டு நம்மவர் வேதப் பொருள் நிர்ணயிப்பர் என்றும், பேறு தப்பாத உபாயம் என்றும் கூறி முடித்தோம்.

●

# தசாவதாரிகை

வேதமெனும் நாற்குழவி வேலரக்கன் கையில் வர
தானும் அந்த வேதத்தையே தண்ணீரில் மறைத்துவைக்க
நான்முகனும் அதைக்கண்டு நாற்றிசையும் பதறியழ
மாலவனும் புன்னகைத்து மச்சமாய் அவதரித்தான்.

தான்பெற்ற பெருவரத்தால் தலைகனத்து அரக்கர் கோன்
பூவுலகின் உயிரையெல்லாம் இரக்கமின்றி அழித்துவர
ஞானிகளும், யோகிகளும் மாலவனை வேண்டி நிற்க
குற்றமதை தாங்காத மாலவனும் கூர்மமாய் அவதரித்தான்.

உலகம் உய்யக் கொண்டல் வண்ணன் அனைத்துயிரும்
காக்க எண்ணி அமரர்கோன் தனைமாற்றி
பூவுலகின் நிலைமாற்ற நினைத்திட்டான் வள்ளல் பிரான்
வராகமாய்த் தோன்றிட்டான்.

தடதட தடவென இடியொலி முழக்கிட
சடசட சடவென கிளைபல நொறுங்கிட
சட்டென கிட்டென சொல்லிய வண்ணம்காட்ட
பட்டெனத் தோன்றினன் பரந்தாமன் சிங்கமாய்.

அனைத்துயிரும் அளந்திட்டே படைத்திட்டான் வள்ளல்பிரான்
தானுமங்கே மறந்திட்டான் பூவுலகை அளக்க எண்ணி
மலர்முகத்தோன் துளபமணி மாலையுடன் தாழ்ங்குடையுடனே
தோன்றிட்டான் வாமனனாய் அளந்திட்டான் பூவுலகை.

முக்காலும் உணர்ந்தபிரான் பிற்காலமதை நினைத்து
தற்காலம் தந்தைமொழிகேட்டு தாயின் பழிதுடைப்போம்
என்றெண்ணி எக்காலம் புவிபேசும் என்றுதான்
நினைத்தான் போலும் பரசுராமன்.

வேதம் படைத்த வள்ளல் திருமகனாய்ப் பிறந்திட்டான்
சொல் ஒன்று, பாணமொன்று, தான்கொண்ட மனையுமொன்று
என ரவிகுலத்தோன் உணர்ந்திட்டான் ரகுகுலம்தான்
வளரஎண்ணி ராகவனும் உதித்திட்டான்.

வைகுந்தப் பதியினிலே வாசனொடு இலக்குமியும்
அரிதுயிலும் கொண்டிருந்தான் துயலவில்லை அடுத்துவரும்
வினையை எண்ணி இகவாழ்க்கை அருள வள்ளல்
இளையனுக்காய்ப் பிறந்து வந்தான் பலராமனாய்.

கோகுலத்தில் பிறந்தவனும் கோல கோபியரின்
கொஞ்சலுடன் ராசக்கிரீடை புரிந்தவனும்
வித்தொன்றே விழுதாகும் என்பது போல் கீதையின்
தத்துவத்தை சொல்லவன்றே அவதரித்தான் கண்ணபிரான்.

மக்கள் மனம்மாறும் மண்ணுலகில் மானமென்ற
பெயர்போகும், தர்மம் சதிராடும் யுகதர்மம் சீர்குலையும்
எரிமலையும் சிரித்துவர விரிகடலும் பொங்கியெழ
புறப்படுவான் புவிகாக்க பரவியுடன் கல்கி.

திரு. கே. ஸ்ரீனிவாசன், சேலம்.

# ஆஞ்சநேயர் வழிபாட்டில் சில தாத்பர்யங்கள்

**வடைமாலை சாத்துவதின் தாத்பர்யம் :**

சீதா பிராட்டியார் பரிசளித்த முத்துமாலையைச் சுவைத்து, ராம நாம சுகம் அதில் உண்டா என்று பார்த்துப் பிய்த்து எறிந்தவர் ஆஞ்ச நேயர். அதுபோலவே வடைமாலையையும் அவர் கழுத்தில் போட்ட வுடன் சுவைத்துப்பார்த்துப்போட்டு விடுகிறார். அவர் திருவமுது செய்த அந்த உச்சிஷ்டம் எத்துணை விசேஷ மானது!

மாலைபோல் கோர்த்துக் கழுத்தில் போடுவதற்கு உகந்தது நடுவே துவாரம் உள்ள வடை ஒன்று தான்.

கொழுப்புநிறைந்த அரக்கர்களைப் போர்க்களத்திலே தமது புஜபலத் தால் வடை தட்டுவது போல் தட்டி சம்ஹாரம் செய்தவர் ஆஞ்சநேயர். எனவேதான் கொழுப்புச் சத்து நிறைந்த உளுந்தைச் சேர்த்து, அவருக்கு வடை மாலை செய்து சாத்துகிறார்கள்.

**வெற்றி மாலை !**

போர்க்களத்திலே வெற்றிக் கொடி நாட்டியவர் அநுமார். அதனால் தான் அவருக்குக் கொடியிலே வளரும் வெற்றிலையை மாலையாகப் போடுகிறார்கள்.

ராமருக்குக் கொடியாக நின்ற பாரதப் போரில் அர்ஜுனனின் ரதத்திற்கு வெற்றிக்கொடியாக உயர்ந்து அர்ஜுனனுக்குக் கண்ணன் செய்த கீதா உபதேசத்தைத் தமது செவிகளில் கேட்டு ஆனந்தித்த அர்ஜுனனுக்கு வெற்றியைத்தேடிக்கொடுத்த வீரத்திருமகன் ஆஞ்சநேயர். அவருக்கு வெற்றிமாலைபோடுவது தானே விசேஷம்!

வெற்றிலை மாலை போடும் வழக்கம் ஆந்திரப் பிரதேசத்தில் மிக அதிகமாக உள்ளது.

அசோக வனத்தில், சீதா தேவியார், வெற்றிலைக் கொடியிலிருந்து, வெற்றிலை எடுத்து, அனுமாரது சிரசில் போட்டு, "சிரஞ்சீவியாக இருப்பாயாக!" என்று அநுக்கிரஹித்தார்களாம்.

**வெண்ணெய் சாத்துதல் !**

வெண்ணெய்சாத்தி ஆஞ்சநேயரை வழிபடுவதும் விசேஷமாகும். ராம நாமத்தினுள் இருப்பவர் மாருதி. ராமநாமத்தினை இடையறாது ஜபித்துக் கொண்டே இருந்தால், ஆஞ்சநேயரின் பேரருள் நமக்குத் தானாகவே கிட்டும். வெண்ணெய் எப்படி உருகுகிறதோ அது போல் நமது ராம நாம ஜபத்தால் அவர் உள்ளம் உருகுகிறார். நமக்கு உத்தமமான மார்க்கத்தைக் காட்டியருள்கிறார்.

வெண்ணெய் மிகவும் குளிர்ச்சி. போர்க்களத்திலே, ஆஞ்சநேயர் பாறைகளையும், மலைகளையும் பெயர்த்து எடுத்துப் போர் செய்தார். அவரது திருமேனிக்குக் குளிர்ச்சி ஏற்படுவதற்காகவே வெண்ணெய் சாத்தி வழிபடுகிறோம்.

அவரது திருமார்பிலே வெண்ணெய் சாத்துவதால், ஸ்ரீராமபிரானின் திருவடிகளுக்கு வெண்ணெய் சாத்துவது போலாகும். போர்க்களத்தில், ஸ்ரீராமபிரான், ஆஞ்சநேயர் தோள் மீது எழுந்தருளிப் போர் செய்தார். அவரது திருப்பாதம் மாருதியின் அணிமார்பில் தானே இருந்திருக்கும்!

ஐயன், தேவியைத் திருமார்பிலே கொண்டுள்ளான்!

மேலும் கண்ணனுக்கும் மாருதிக்கும் பல விதத்தில் ஒற்றுமைகள் உண்டு!

இருவரும் பாரிஜாத விருக்ஷத்தின் அடியில் வாசம் புரிபவர்கள்.

கண்ணன் பார்த்தனுக்குச் சாரதியாக இருந்தார்; மாருதி பார்த்தனுக்கு வெற்றிக்கொடியாக நின்றார்.

கண்ணன் நண்பர்களான பாண்டவர்களுக்காக துரியோதனனிடம் தூது சென்றார். ஆஞ்சநேயர் நண்பர்களான ராமலக்ஷ்மணர்களுக்காக இராவணனிடம் தூது சென்றார்.

இருவரும் விஸ்வரூப தரிசனம் தந்தவர்கள்.

இப்படி கண்ணனும், மாருதியும் ஒற்றுமையோடு இணைந்திருப்பதால் தான், வெண்ணெய்யை மாருதிக்கு சாத்தி வழிபடுகிறார்கள்.

**குங்குமப் பொட்டு தாத்பர்யம் :**

வாலில் குங்குமம் வைத்து வழிபடுவதின் தாத்பரியம் என்னவென்றால் அனுமாருக்கு வாலில் தான் சக்தி அதிகம்.

பக்தி சிரத்தையுடன் ராம நாமத்தை ஜபித்துக் கொண்டு இடுப்பில் வால் தோன்றும் திருவிடத்திலிருந்து தினமும் சந்தனம் சாத்தி குங்குமத்திலகம் வைத்துக் கொண்டு வரவேண்டும். வாலின் நுனியை அடைந்ததும், கலைத்து விட்டு மறுபடியும் பொட்டு வைக்க வேண்டும்.

வால் முனையில் பொட்டு பூர்த்தி பெறுகின்ற சுபதினத்தில், எம்பெருமானுக்கு வடைமாலை சாத்தி, உப்பிலியப்பனுக்கு நிவேதிப்பது போல் உப்பில்லா திருவமுது நிவேதிக்க வேண்டும்.

காரியம் சித்தியாகும் வரை இவ்வண்ணம் பொட்டு வைத்துக் கொண்டே வரவேண்டும்.

அசோக வனத்தில், சீதாபிராட்டியார் வெற்றிலைச் சாற்றினால், அநுமானின் திருவுருவத்தை எழுதினார்கள். தினமும் அவரது வாலிற்குச் செம்மண்ணைக் குழைத்து பொட்டு வைத்து பூஜித்து வந்தார்கள். அவர்களுக்கு வெற்றி கிட்டியது போல் அனைவருக்கும் வெற்றி கிட்டும்.

நம்பிக்கையுடன் செய்கின்ற எந்தக் காரியத்துக்கும் வெற்றி நிச்சயம்.

★

திரு. உ. வெங்கடேசன்
மயிலாடுதுறை-3.

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

பொறுமை, தவறு, ஏமாற்றம் ஆகிய வற்றிற்கு வைதேசிகர்களான தேசிகர்களின் பரம்பரையில் அவதரித்த ஸ்வாமி தேசிகன் (ஸங். ஸூ 10-89) உயர்ந்த நோக்கங்களைக் கொண்டே இதை இயற்றினர் என்று கொள்வதே சாலச் சிறந்தது. மேலும், நன்மை கெடுதல்களைக் காட்டவும், அற்ப மதங்களுக்கெதிரில் வேதாந்தத்தின் மேன்மையை நிலைநாட்டவும் இந்நாடகம் இயற்றப்பட்டதென்று ஸ்வாமி தாமே அருளியுள்ளார் (ஸங். ஸூ. 1-11). எப்படியும் ஸங்கல்ப ஸூர்யோதயம் ப்ரபோத சந்த்ரோதயத்துக்கு வேதாந்தத்திலும் கவிதையிலும் ஒரு சிறந்த எதிரியாகத் திகழ்கிறது என்பதில் ஐயமில்லை.

## நாடகத்தில் அர்ப்பணம்:

உலகம் முழுவதும் ஒரு நாடக மேடை என்றான் ஷேக்ஸ்பியர் என்ற மேல் நாட்டுக்கவி. பகவான் ஸம்ஸாரமாகிற நாடகத்தை நடத்துபவன். அவன் 'அகில புவந ஜன்ம ஸ்தேமபங்காதிலீலன்' (ஸ்ரீபாஷ்யம் மங்கள ச்லோகம்). உலகப் படைப்பு, அளிப்பு, அழிப்பு யாவும் பரப்ரஹ்மத்துக்கு லீலை என்று ப்ரஹ்மஸூத்ரம் (2-3-35) கூறுகிறது. மஹாபாரதமும் (ஸபா 40-78) பாகவதமும் (3-2-30) எமபெருமானின் லீலையை வலியுறுத்துகின்றன. ஸ்வாமி தேசிகன் தமது நாடகத்திலும் இதை உணர்த்தியுள்ளார் (ஸங். ஸூ 1-68, 9-5). ஆகவே ஜகத் எம்பெருமானின் லீலா விபூதி என்று சொல்லப்படுகிறது.

பகவானுக்கு தயை, லீலை என்று இரண்டு தேவிமார்கள். தயைக்கு ஜீவர்களை ஸம்ஸாரத்திலிருந்து விடுவிப்பதில் ஆர்வம். லீலைக்கோ ஸம்ஸார நாடகத்தை நீடிப்பதில் விருப்பம். பகவான் சதுரனாகையாலே இருமஹிஷிகளையும் ஸந்தோஷிக்கச் செய்ய வழி வகுக்கிறான். ஜீவன் செய்யும் கர்மத்தில் ஸுக்ருதம் அல்லது புண்யம் என்று எண்ணக் கூடியது ஏதேனுமிருந்தால், உடனே அவன் தயைக்கு வசப்பட்டு அவனை விடுவிக்க முற்படுகிறான். மற்றவர்கள் விஷயத்தில் அவன் லீலையின் இச்சையையே அநுஸரிக்கிறான்.

பகவான் ஆச்சர்யமான இந்த உலகத்தைச் சித்தரிக்கும் ஓர் சிறந்த ஓவியனாவான். லீலை என்னும் கருவியில் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மைகளைக் கொண்டு, ஓவியத்தை உருவாக்குகிறான் (ஸங். ஸூ. 1-73). (யாதவாப்யுதயம் 1-9ம் காண்க. அதைக் கண்ணுற்ற அப்பய்ய தீக்ஷிதர் ஆச்சர்யத்தில் மூழ்கிப் போனதைத் தமது வ்யாக்யானத்தில் கூறியுள்ளார்). மேலும், பகவான் நாடக மேடையின் நாயகன், ரங்கநாதன். ஆகையால் பத்து அவதாரங்களைச் செய்த ஆதி நடிகனான விஷ்ணுவுக்கே தேசிகன் தமது நாடகத்தை ப்ரார்த்தனா பூர்வமாக அர்ப்பணிக்கிறார். அவன் தசாவதாரங்களைச் செய்ததற்கேற்ப இந்நாடகத்தில் பத்து அங்கங்களைப் பொருத்தமாக அமைத்துள்ளார் (ஸங். ஸூ. 1-6)

## தலைப்பின் பொருத்தமும் பொருளும்:

நாடகத்தின் தலைப்பே மிக அர்த்த கர்பமாகவும், அத்வைதத்திற்கும் விசிஷ்டாத்வைதத்திற்குமுள்ள வாசியைக் காண்பிப்பதாகவும் அமைந்துள்ளது. ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்று என்னும் ஐக்ய ஜ்ஞானமாகிய சந்திரன் உதயமானதும் அவித்யையாகிற இருள் அகல்கிறது என்னும் அத்வைதவேதாந்தத்தை உட்கொண்டது ப்ரபோத சந்த்ரோதயம். அதற்கெதிராக ஸ்வாமி தேசிகன் தமது ஸங்கல்ப ஸூர்யோதயத்தில், ஜீவனின் பக்தி யோகத்தினால் ப்ரீதியடைந்த எம்பெருமான் அவனை ஸம்ஸாரத்திலிருந்து விடுவிக்க 'மோக்ஷயிஷ்யாமி' (கீதை 18-64) என்று ஸங்கல்பிக்கிறான் என்பதை விளங்க வைக்கிறார். பகவத் ஸங்கல்பமாகிய ஸூர்யன் உதயமானதும், காரிருள் சூழ்ந்த ஸம்ஸாரமாகிய இரவு மறைகிறது. உண்மையில் தமது ஆராத்ய தேவதையான ஹயக்ரீவனை "ப்ராசீ ஸந்த்யா" (ஸங். ஸூ. 1-5) என்று ஸ்வாமி தேசிகன் கூறுவதிலிருந்து, அந்த ஹயக்ரீவனிடமிருந்தே ஸங்கல்பமான ஸூர்யன் உதயமாக வேண்டும் என்று அவர் ஸூசிப்பிக்கிறார்.

## ஸூர்யோதயமும் சந்த்ரோதயமும்:

இந்த இரு நாடகங்களிலும் கையாளப்பட்ட ஸூர்யோதயம், சந்த்ரோதயம் என்ற உவமைகளின் பொருத்தத்தை இப்போது சற்றுக் கவனிப்போம். திரும்பி வருதலில்லாத நித்யானந்த பூமியான ஸ்ரீ வைகுண்டத்தை அடைவிக்கும் அர்ச்சிராதி மார்க்கத்துக்கும், மறுபடி தவறாமல் ஸம்ஸாரத்தை அடைவிக்கும் ஸ்வர்கத்துக்கு அழைத்துச் செல்லும் தூமாதி மார்க்கத்துக்கும் பொதுவாக உள்ளது சந்திரன். புண்யம் கழிந்ததும் ஸ்வர்கத்திலிருந்து பூமிக்குத் திரும்புவது நிச்சயம் என்று கீதை (9-21) தெளிவாகக் கூறுகிறது. ஆகவே சந்திரனின் பெயரைக் கொள்வதில் லாபம் ஸந்தேஹமே. அது விடுதலையை நிச்சயமாகக் குறிக்காது. அது கேவலம் ஸ்வர்கத்தை அடைவதையும் பிறகு ஸம்ஸாரத்துக்கு மறுபடியும் திரும்புவதையுமே குறிக்கலாம். இதற்கு எதிராக, ஸூர்யன் அர்ச்சிராதி மார்க்கத்தில் மட்டுமுள்ளவன், தூமாதி மார்க்கத்திலில்லாதவன். ஸூர்யன் பெயரைக் கொள்வதால் மோக்ஷம் நிச்சயம் என்று தெளிவாகக் காட்டப்பட்டதாகிறது.

மேலும், சந்திரன் வளர்வதும் தேய்வதுமாயுள்ளவன். இரவுடன் கூடவே வாஸம் செய்பவன். சந்த்ரோதயமான பிறகும் மரங்களின் அடிகளிலும் மற்றவிடங்களிலும் இருளின் திரள் உளது என்று காளிதாஸன் அழகாக வர்ணிக்கிறான் (ரகுவம்சம் 13-56). தவிரவும், சந்திரன் இருட்டைப் போக்கடிக்கலாம்; இர

வைப் போக்க வல்லவனல்லன். இதற்கு மாருக ஸூர்யன் உதிப்பதே தாமதம், உடனே இருள் முழுவதும் நாசமடைகிறது, இரவு மறைகிறது என்பது கண்கூடு. ஸூர்யன் ஸ்வயம் ப்ரகாசமானவன். சந்திரனுக்குத் தனக்கான ஒளி கிடையாது. ஸூர்யனின் ஒளியில் அது ப்ரதிபலிக்கிறது.

சந்த்ரோதயாக வர்ணிக்கப்படும் ஜ்ஞானம் தானுகவே மோக்ஷமளிக்க வல்லதன்று. பக்தியோகம் அல்லது ப்ரபத்தியால் மகிழ்ச்சியடைந்த பரமனே தனது அநுக்ரஹ ஸங்கல்பத்தாலே மோக்ஷமளிக்கிறுன். கடோபநிஷத் (2-23), முண்டகோபநிஷத் (3-2-3) ஆகியவை இவ்வாறு முறையிடுகின்றன. "பரமாத்மா ப்ரவசநத்தாலோ, த்யானத்தாலோ, அதிக கேள்வி ஜ்ஞானத்தாலோ அடையப்படுவதில்லை. அவன் எவனை வரிக்கிறுனே, அவனுலேயே அடையப்படுகிறுன்.''(கீதை 11-53, 54ம் காண்க) எம்பெருமானின் அநுக்ரஹத்தின் மூலமே மோக்ஷம் எனபது இதிலிருந்து தெளிவு. கடோபநிஷத் 2-20ம் இதையே வற்புறுத்துகிறது: அந்தர்யாமியான பகவானின் அநுக்ரஹ ஸங்கல்பத்தினுலேயே ஜீவன் சரீரத்தைவிடும் தசையில் ப்ரஹ்ம நாடியை யடைந்து ஸ்ரீ வைகுண்டம் செல்கிறுன் என்று ப்ரஹ்ம ஸூத்ரம் (4-2-16) உரைக்கிறது. (பாதுகா ஸஹஸ்ரம் ரத்நஸாமாந்ய பத்ததி 40ம் காண்க). சரணுகதி என்ற ப்ரபத்தி பகவானின் இந்த அநுக்ரஹத்தையே மூலமாகக் கொண்டது. பகவத் பாஷ்யகாரரும் தமது ஸ்ரீ பாஷ்யத்தில் (1-4-1) तस्य च वशीकरणं तच्छरणागतिरेव ('தஸ்ஸ்ச வசீகரணம் தச்சரணுகதிரேவ') என்று பகவானை வசீகரிக்கும் உபாயம் அவனிடம் சரணுகதி செய்வதே என்று அருளியுள்ளார். ஸ்வாமி தேசிகன் தமது தயா சதகம் முழுவதிலும் பகவானின் இந்த அநுக்ரஹத்தையே ஸ்தோத்ரம் செய்ததுமல்லாமல், இந்த நாடகத்திலும் அவ்விஷயத்தைப் பல விடங்களில் தெளிவித்துள்ளார் (ஸங். ஸூ. 1-75, 1-93, 10-33).

ப்ரஹ்ம ஸூத்ரத்தின் பலாதிகரணம் எல்லா பலன்களையும ப்ரஹ்மமே கொடுக்கிறது என்று அறுதியிட்டுள்ளது. மோக்ஷத்தைப் பற்றிய அந்த சாஸ்திரம் சொல்லும் பயன்களுக்கு மோக்ஷம் மட்டும் விலக்கு என்று கூறுவது எவ்வாறு நியாயமாகும்? ஒருவனுக்குத் தனது முயற்சியால் ஜ்ஞானமுண்டாகி அதனுலேயே அவன் மோக்ஷமடைகிறுன் என்ற ப்ரபோத சந்த்ரோதயத்தின் கூற்று ஸமுத்திரத்தில் உப்பால் அணை கட்டுவதற்கொப்பாகும் (ஸங். ஸூ 2-30)

இவ்விதம் ஸங்கல்ப ஸூர்யோதயம் என்ற தலைப்பே ஸ்வாமி தேசிகனின் ஆழ்ந்த ஜ்ஞானத்துக்கும் மேதா விலாஸத்திற்கும் தகுந்த அறிகுறியாகும். ப்ரபோத சந்த்ரோதயம் ஆரம்பத்திலேயே ஸூர்யனைக் குறிக்கிறது. ஐந்தாம் அங்கத்தில் 'ஸங்கல்பம்' என்ற ஓர் பாத்திரத்தையும் கொண்டது. ஆயினும் அதன் ஆசிரியருக்கு 'ஸங்கல்ப ஸூர்யோதயம்' என்று பெயர் வைக்கத் தோன்றவில்லை, அவர் அத்வைதியாகையால். ஸ்வாமி தேசிகனே இத்தலைப்பின் பொருத்தத்தை உடனே கண்டறிந்தார்.



பஞ்சமுக ஹநுமார் வாகனத்தில் காட்சியளிக்கும் மன்னுர்குடி ஸ்ரீ ராஜகோபாலன் உத்ஸவமூர்த்தி.
திரு. வி., எஸ். ஸ்ரீநிவாசன், தஞ்சாவூர்.

(அடுத்த இதழில் முடியும்)

# செய்திச் சுருக்கம்



## அகண்ட கானம்:

இறைவனின் திருவருள் பெற இக் கலியுகத்தில் நமக்குள்ள ஒரே வழி பக்தி மார்க்கமாகும். இப்பக்தி மார்க்கத்திற்கு நம்மை சுலபமாக இழுத்துச் செல்வதில் இசை ஒரு மாபெரும் பங்கு வகுக்கின்றது. இதற்கு உதாரணமாக ஆழ்வார்கள், நாயன்மார்கள் முதல் இசைத் தொண்டர்களான அன்னமாச்சார்யா, புரந்தரதாஸர், நாராயண தீர்த்தர், இராம தாஸர், சதா சிவபிரம்மம் உள்ளிட்டு சங்கீத மும்மூர்த்திகளான ஸ்ரீ தியாக ராஜர், ஸ்ரீ முத்துசுவாமி தீட்சதர், ஸ்ரீ சியாமா சாஸ்திரி வரை தங்கள் பாக்கள் மூலம் பக்தி மார்க்கத்தைப் பரப்பிய மெய்யடியார்களாக விளங்கு கிறார்கள். இவர்களில் இசைக்கும், பக்திக்கும் புது மெருகூட்டிய பெருமை ஸ்ரீ தியாகராஜரையே சாரும். திருமலை ஸ்ரீ வேங்கடேஸ் வரர்மீது பாடிய மூன்று பாடல்கள் உள்ளிட்டு, சுமார் 24,000 கீர்த் தனைகள் எழுதிய ஸ்ரீ தியாக ராஜரின் ஆராதனை விழா, இவ் வாண்டு திருப்பதியில் ஸ்ரீ தியாகராஜர் விழாக் குழுவினரால் புதுமையாக, கடந்த மார்ச் மாதம் 9-ம் தேதி மாலை 5 மணி முதல் அடுத்த நாள் மாலை 5 மணி வரை தொடர்ந்து ஸ்ரீ தியாக ராஜரின் கீர்த்தனைகள் தமிழ் நாட்டி லிருந்தும், ஆந்திர மாநிலத்திலிருந் தும் வருகை புரிந்த புகழ் பெற்ற இசைக்கலைஞர்கள் கொண்டு நடத்தப் பட்டது. ஸ்ரீ தியாகராஜரின் கீர்த்தனை களின் பெருமையினை இப்பகுதியில் பரப்பும் வகையில் 1943-ம் ஆண்டு துவக்கப்பட்ட இந்த ஸ்ரீ தியாகராஜ விழாக் குழுவின் சார்பில், தி. தி. தேவஸ்தானம் உதவியுடன் இவ் விழா கொண்டாடப்பட்டது. ஆலா பனை மற்றும் ஸ்வர பிரஸ்டாரம் எது வும் இன்றி, 'பாடப்பட்ட கீர்த்தனை மறுபடியும் பாடாத வகையில் ஸ்ரீ தியாராஜரின் 235 கீர்த்தனைகள் இந்த 24 மணி நேர ஆராதனை விழா வில் பாடப்பட்டன. இவ்விழாவினை 9-3-85 அன்று மாலை சென்னை தென் னக இரயில்வே தலைமை வர்த்தக கண்காணிப்பாளர் திரு. என். வி. சுப்ரமண்யம் அவர்கள் அகண்ட தீபம் ஏற்றி துவக்கி வைத்தார். ஸ்ரீ தியாக ராஜரின் பஞ்சரத்ன கீர்த்தனைகள் இசைக் கலைஞர்கள் யாவரும் சேர்ந்து பாடியதைத் தொடர்ந்து, பல்வேறு இசைக் கலைஞர்கள் தொடர் முறை யாக கீர்த்தனைகளைப் பாடினர். இத் துவக்க விழாவில், ஸ்ரீ தியாகராஜ கோயில் அறக்கட்டளையின் தலைவர் திரு. பி. கே. விஜயராகவன் அவர் கள் திரு. என். வி. சுப்ரமண்யம் அவர்களுக்கு மலர் மாலை அணிவிக்க, தி. தி. தே. செயலாட்சித் தலைவர். திரு. எஸ். லக்ஷ்மி நாராயண ஐ. ஏ. எஸ். அவர்கள் தலைமை வகிக்க, விழா இனிது துவங்கியது.

திருவாளர்கள் எஸ். ராஜன், தேர முந்தூர் ஸ்ரீநிவாசாசாரி, பி. கிருஷ்ண மூர்த்தி, வைகல் எஸ். ஞானஸ்கந் தன், திருவாரூர் சேதுராமன், குழிக் கரை விஸ்வலிங்கம், எம். எஸ். சதா சிவன், எம். வி. துரைசாமி ஐயங் கார், ஏ. பத்மநாபன், எம். எஸ். பத்மா, கல்பகம் ராமன், நிர்மலா சுந்தரராஜன், விஞ்சமூரி லக்ஷ்மி, மணி கிருஷ்ண சுவாமி, பாரூர் வெங் கடராமன், ஆலந்தூர் நடராஜன், பி. தியாகராஜன், டி. கேசவலு, டி எம். ஸ்ரீராம், எம். என். கந்தசுவாமி, செங்கோட்டை சுந்தரராஜன், எம். கே. தினதயாளன், விவே கானந்தா ஸ்ரீநிவாஸ், (தமிழ்நாடு) டி. பசுபதி, எஸ். ஆர். ஜானகி ராமன், வி. எல். ஜானகி ராம், எம். எஸ். பாலசுப்ரமண்ய சர்மா, பி. கே. இந்திராணி, சாருமதி. வெங்கட. பத்மாவதி, உதயசங்கர், சுதாகர், பாஸ்கர், (திருப்பதி) ஆகியோர் இவ்விழாவில் பங்கேற்ற இசைக் கலைஞர்கள். 10-3-85 அன்று மாலை 5 மணி அளவில் நடைபெற்ற விழா வில் தி. தி. தே. செயலாட்சித் தலை வர், பங்கு பெற்ற கலைஞர்களுக்கு ஸ்ரீ வேங்கடேஸ்வரர் திருவுருவம் கொண்ட கலைத்தட்டுக்கள் வழங் கினர். இவ்விழாவில் திருப்பதி பீமாஸ் ஹோட்டல் அதிபர் திரு. ரங்கநாதன், திரு. என். கிருஷ்ண சுவாமி (ஆலோசகர், டி. வி. எஸ். சென்னை) கே. வி. சுப்ரமண்யம், மற் றும் பல முக்கிய பிரமுகர்களும் கலந்து கொண்டனர்.

தகவல்: ஏ. நடராஜன்.

---

## திருத்தம்

சென்ற இதழில் 46-ம் பக்கத்தில் பொறுப்பாண்மைக்குழு முடிவுகள் தலைப்பில் வெளியிடப்பட்ட இலவச உணவு வழங்கும் திட்டத்தினைப் பற் றிக் கூறுகையில், நன்கொடையாளர் களிடமிருந்து ரூ. 10 இலட்சம் நன் கொடையாக ஏற்றுக் கொள்ளப் படும் என்பதற்குப் பதிலாக ரூ 1 இலட்சம் என்று தவறாக குறிக்கப் பட்டுள்ளது என்பதை வாசகர்களின் கவனத்திற்கு கொண்டுவர விழை கின்றோம்.

---



## இளம்பிள்ளைவாதம் சிகிச்சை முகாம் :

தி. தி. தே. ஆதரவில் இளம்பிள்ளை வாதம் இலவச அறுவை சிகிச்சை முகாம் ஒன்று 12-3-85 அன்று, திருப்பதியில் தி. தி. தே. மத்திய மருத்துவ மனையில் நடை பெற்றது. இம்முகாமின்போது 300 நோயாளிகள் பரிசோதிக்கப்பட்டனர்; 74 நோயாளிகளுக்கு அறுவை சிகிச்சை மேற்கொள்ளப்பட்டது. 90 நோயாளிகளுக்கு இலவசமாக செயற்கை கை, கால் உறுப்புக்கள் வழங்கப்பட்டன. இந்த முகாமின்போது நோயாளிகளுக்கு இலவசமாக தங்கு வசதியும், உணவும் வழங்கப்பட்டன.

## 100வது பிறந்தநாள் விழா

திருப்பதி அடுத்துள்ள யேர்ப்பேடு கிராமத்தில் உள்ள வியாஸ்ரமத்தில் ஸ்ரீ மலையாள சுவாமியின் 100-வது பிறந்த நாள் விழா 28-3-85 முதல் 1-4-85 வரை பெரு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. 1962-ல் இவ்வுலகை விட்டு மறைந்த ஸ்ரீ மலையாள சுவாமிகள், தான் பிறந்த மலையாள நாட்டிலிருந்து விலகி இந்தக் கிராமத்தில் இவ் ஆஸ்ரமத்தை ஏற்படுத்தினர். இந்த ஆஸ்ரமத்தின் கிளைகளாக ஆந்திர நாட்டின் பல பகுதிகளில் பல அறநிலையங்களை ஸ்ரீ சுவாமிகள் ஏற்படுத்தினர் சமய மேம்பாட்டிற்காகவும் ஏழைகளின் துயர்துடைப்பதற்காகவும் தன் வாழ்நாட்களைக் கழித்த ஸ்ரீ மலையாள சுவாமிகளுக்கு இன்றும் ஆயிரக்கணக்கான பக்தர்கள் உண்டு. இந்த பிறந்த நாள் விழாவின போது ராமகிருஷ்ண மடத்தைச் சார்ந்த சுவாமி ஸ்ரீரங்கனாநந்தா, தெய்வீக நெறிக் குழுவைச்சார்ந்தசிதானந்தாமற்றும் ஹரித்துவார், ரிஷிகேஷ், பம்பாய், கல்கத்தா ஆகிய இடங்களைச் சார்ந்த பல்வேறு மடங்களின் தலைவர்கள் பல சமயச்சிறப்புரைகள் ஆற்றினர். இவ் விழாவின் தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர். திரு. வி. கே. டி. வி. சத்ய நாராயண ராஜு, தி. தி.தே.செயலாட்சித்தலைவர், மற்றும் உயர் அலுவலர்களும் பங்கேற்றனர்.

## நினைவு நாள் விழா

திருப்பதியில் தி. தி. தேவஸ்தான ஆதரவில் தாள்ளப்பாக்க ஸ்ரீ அன்னமாச்சார்யாவின் 482-வது நினைவுநாள் விழா 18-3-85 முதல் 24-3-85 வரை வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. 18-3-85 அன்று காலை ஸ்ரீ அன்னமய்யாவின் திருவுருவத்துடன் கூடிய ஊர்வலம் ஒன்று நகரில் நடைபெற்றது. இதில் தி. தி. தேவஸ்தான உயர் அலுவலர்களும், உள்ளூர் பெருமக்களும் கலந்து கொண்டனர். அன்று மாலை ஏற்பாடு செய்யப்பட்ட துவக்க விழாவிற்கு தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. எஸ். லக்ஷ்மி நாராயணா, ஐ ஏ.எஸ். அவர்கள், ஸ்ரீ அன்னமய்யாவின் பாடல்களின் பெருமையைப் பரப்பிடும் வகையில் விரைவில், ஸ்ரீ அன்னமாச்சார்யா திட்டக்குழுவின கிளைகள் ஹைதராபாத், விஜயவாடா,, விசாகப்பட்டினம் போனற இடங்களில் திறக்கப் பட்டு, உள்ளூர் வானொலி நிலைய கலைஞர்கள் உதவியுடன் அன்னாரின் கீர்த்தனைகள் இசைக்கப்படும் என்று கூறினர். திருப்பதி ஸ்ரீ அன்னமாச்சார்யா திட்டக்குழுவின் சிறப்புஅலுவலர் திரு. காமிசெட்டி ஸ்ரீநிவாசலு செட்டி அவர்கள் தம் ஆண்டறிக்கையில், அன்னமய்யாவின் பாடல்கள் பொறிக்கப்பெற்ற செப்பேடுகள் அண்மையில் ஸ்ரீரங்கத்திலும், தஞ்சையிலும் கிடைத்துள்ளன என்பதைக் குறிப்பிட்டு, மேலும் இது போனற செப்பேடுகளோ, ஓலைச் சுவடிகளோ பொதுமக்களிடம் இருந்தால், தகுந்த சன்மானம் அன்னாருக்கு வழங்கப்பட்டு அவை மேலாண்மையால் பெறப்படும் என்று கூறினர். இவ் விழாவில் சிறப்பு விருந்தினராக ஆந்திர பிரபா தெலுங்கு நாளேட்டின் ஆசிரியர் திரு. பி வெங்கடேஸ்வரராவ் மற்றும் சிறப்புச் சொற்பொழிவாளராக டாக்டர் வேட்டூரி ஆனந்தமூர்த்தி அவர்களும் பங்கேற்றனர். அன்று இரவு திரு. பி. ராதா கிருஷ்ணமூர்த்தி அவர்களின் 'தினமும் துவாதசி'' எனும் நிழற்பட நிகழ்ச்சி ஒன்றும், திரு. நேதுநூரி கிருஷ்ணமூர்த்தி அவர்களின் வாய்ப்பாட்டு இன்னிசைக் கச்சேரி ஒன்றும் நடைபெற்றன. பிறகு 24-3-85 வரை, காலையிலும், மாலையிலும் பல்வேறு இசைக்கலைஞர் பங்கு பெற்ற இன்னிசைக் கச்சேரிகளும் ஹரிகதை நிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

## அடிக்கல் நாட்டு விழா :

திருப்பதி திருச்சானூர் சாலையில், தற்போது கட்டப்பட்டுவரும் தி. தி. தே. திருமண மண்டபத்திற்கு அருகில் சுமார் 17 ஏக்கர் நிலப்பரப்பில், ரூ. 1 கோடி செலவில், ஸ்ரீ கோவிந்த ராஜ சுவாமி கலைக்கல்லூரிக்கான கட்டிடத்திற்கு தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர். திரு. வி. கே. டி. வி. சத்ய நாராயண ராஜு, எம். எல். ஏ. அவர்கள் 28-3-85 அன்று அடிக்கல் நாட்டினர். இது சம்பந்தமாக ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்கு வருகை புரிந்தோரை, தி. தி. தே. கல்வி அலுவலர் திரு சந்திர சேகர நாயுடு அவர்கள் வரவேற்க, விழாவிற்கு தி. தி. தே. செயலாட்சித் தலைவர். திரு. எஸ். லக்ஷ்மி நாராயணா அவர்கள் தலைமை வகித்தார். இககல்லூரி கட்டிடத்திற்கு அடுத்து மாணவர் தங்கு விடுதியும், விரிவுரையாளர்களுக்கான குடியிருப்பும் கட்டப்படும். ✱

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501

